

மாண்புமிகு தமிழக முதல்வர் பொன்மனச் செம்மல் டாக்டர் எம்.ஜி.ஆர். அவர்கள், மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயம் மற்றும் மதுரை அருள்மிகு கூடலழகர் ஆலய அங்காடிகள் கட்டுமானப் பணிக்குக் கால்கோள் நாட்டியபோது எடுக்கப்பட்டது இப்படம். மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் திருமிகு ஆர்.எம்.வீ. அவர்கள் நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கினார்கள்.



முகப்பு

உலகத் தமிழ்ச் சங்கம் கண்ட
தமிழ்த்தாயின் திருவுருவம்
இவ்விதழை அலங்கரிக்கின்றது.

# திருக்கோயில்

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
119, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை,
சென்னை-600 034.

தொலைபேசி எண்: 479407

ஆசிரியர்: கவிஞர் டாக்டர்
த. அமிர்தலிங்கம், M.A., Ph.D.

| மாலை 28 | திருவள்ளுவர் ஆண்டு 2017 அட்சய ஆண்டு ஆனித்திங்கள் ஜூன் 1986 விலை ரூ. 2-00 | மணி: 6 |
|---|---|---|

## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்!

திருக்கோயில் திங்கள் இதழின் சந்தாதாரர்களாகச் சேர விருப்பமுள்ளவர்கள்

உயர்திரு
**ஆணையர் அவர்கள்**
**அறநிலைய ஆட்சித்துறை**
**சென்னை-600 034**

என்ற முகவரிக்கு மணியார்டர் மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

**திருக்கோயில் இதழின் ஆண்டுச் சந்தா ரூ 24.00 மட்டும்.**

புதிய சந்தாதாரர்கள் ஒரு ஆண்டிற்கு ரூ. 24/- எனக் கணக்கிட்டு எத்தனை ஆண்டுகளுக்குச் சந்தா கட்ட விரும்பினாலும் அத்தனை ஆண்டுகளுக்குப் பணம் அனுப்பிவைக்கலாம். அவர்கள் எப்பொழுது பணம் அனுப்பினாலும் பணம் ஏற்றுக் கொள்ளப்பட்டு, அந்தத் திங்களிலிருந்து அவர்கள் அனுப்பிய காலம் முடிய ''திருக்கோயில்'' இதழ் அனுப்பிவைக்கப்படும் என்பது தெரிவித்துக் கொள்ளப்படுகிறது.

பழைய சந்தாதாரர்கள், கடிதம் எழுதும் பொழுதும், பணம் அனுப்பும் பொழுதும், தங்கள் சந்தா எண்ணையும் தவறாமல் தெரிவித்து உதவினால்தான், உடனுக்குடன் ஆவன செய்ய வசதியாக இருக்கும். புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பும் பொழுது மணியார்டர் கூப்பனில் புதிய சந்தா என்பதைக் குறிப்பிடுமாறும், சரியான முழு முகவரியைப் பின்கோட் (Pin code) எண்ணுடன் தெரிவிக்குமாறும் கேட்டுக் கொள்ளப் படுகின்றனர்.

## பொருளடக்கம்

மாண்புமிகு டாக்டர்
தமிழக முதல்வர் பொன்மனச்செம்மல்

**எம். ஜி. ஆர். அவர்கள்**

## மதுரையில் உலகத் தமிழ்ச் சங்கத்தைத் தொடக்கி வைத்து ஆற்றிய சிறப்புரை.



''என்னை வாழ வைக்கும் தெய்வங்களான தாய்க்குலமே! என்னை வழி நடத்திச் செல்லும் பெரியோர்களே! என் ரத்தத்தின் ரத்தமான உடன் பிறப்புகளே! தமிழ் அறிஞர் பெரு மக்களே! உங்கள் அனைவருக்கும் என் வணக்கங்கள்.

இந்தப்புத்தாண்டுத் தினத்தில் நம்முடைய நீண்ட நாள் கனவு நனவாகிறது. இன்று சங்கம் வளர்த்த மாமதுரையில் உலக தமிழ்ச் சங்கம் அமைகிறது. தஞ்சையில் தமிழ்ப் பல்கலைக்கழகம் அமைக்கப்பட்டு சிறப்புற இயங்கி வருகிறது.

இன்று மதுரையில் உலகத் தமிழ்ச் சங்கம் தொடங்கப்படுகிறது. நம்முடைய விருப்பங்கள் செயல் வடிவம் பெற்றதை எண்ணிப் பூரிப்பு அடைகிறேன். இன்று தொடங்கும் சங்கம் சங்க கால தமிழ்ச் சங்கத்தின் மறு வடிவம் என்றே கொள்ள வேண்டும்.

இது என்றும் புகழ்பட நின்று நிலவ வேண்டும். தமிழ் மொழி வளர்ச்சியில் அக்கறை கொண்ட அனைவருக்கும் இச்சங்கம் பொதுவானது. இதில் அரசியல் புக இடமில்லை. மீண்டும்சொல்கிறேன். இதில் அரசியல் புக இடமில்லை.

தமிழினக் கலாச்சாரம், பண்பாடு, மற்றும் நாகரிகம் இவற்றின் பெருமைகளை உலகம் முழுவதும் பரப்புவது இச்சங்கத்தின் பணி. ஆங்கிலம் போல், நவீன விஞ்ஞானத் தொழில் நுட்பக் கருத்துக்களை வெளியிடும் மொழியாகத் தமிழை வளர்த்திட வேண்டும். தமிழ் வாழ்ந்தால்தான் தமிழர்கள் வாழ்வார்கள்; தமிழ்நாடு வாழும் என்று அமரர் பேரறிஞர் அண்ணா அவர்கள் சொன்னார்கள்.

தமிழ் வளரவும், வளம் பெறவும் இச்சங்கம் பாடுபடும். தமிழ்க்கலை, சிற்பம், கலாச்சாரம், இலக்கியம் இவை எல்லாம் நமது ஆற்றலுக்கு சிறந்த சான்றுகள்.

காலத்தால், அவை இன்று தூசு படிந்தும் சிதைந்தும் காணப் படுகின்றன. அவற்றை நீக்கி, தமிழ்க் கலாச்சாரம், பண்பாடு, இவற்றின் உண்மையான வடிவத்தையும் பெரு மையையும் நாம் நிலைநாட்ட வேண்



டும் என்று அமரர் பேரறிஞர் அண்ணா அவர்கள் எடுத்துக் காட்டினார்கள்.

அந்த உன்னத குறிக்கோளை நிறைவேற்ற, இன்று உலகத்தமிழ்ச் சங்கம் பிறக்கிறது. உலகத் தமிழ்ச் சங்கத்தை நிறுவி, துவக்கி வைக்கின்ற இந்த அரிய வாய்ப்பிற்கு நான் பெரு மிதமும் மகிழ்ச்சியும் அடைகிறேன்.

உலகத் தமிழ்ச் சங்க அமைப்புப் பணிக்கு 10 கோடி ரூபாய் செலவாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ரூ. 10 கோடிக்கு மேல் எவ்வளவு செலவானா லும் அதை அரசு ஏற்றுக் கொள்ளும். இந்தச் சங்கத்தை உலகெங்கும் வாழும் தமிழ் பேசும் மக்களுக்குக் காணிக்கை யாக்குகிறேன்.

அண்ணா நாமம் வாழ்க! நன்றி, வணக்கம்.''

## உலகத் தமிழ்ச் சங்கம் கண்ட உயர்குண முதல்வர்

சித்திரை முதல்நாள் அன்னை
சீர்மிகு தமிழாள் ஏற்றம்
இத்தரை முழுதும் போற்ற
இனியநம் முதல்வர் கண்டார்
முத்தமிழ் உலகச் சங்கம்
மூதூராம் மதுரை தன்னில்
சித்தமே மகிழ மக்கள்
சிறப்புற வாழ வென்றே.

நற்கீரர் வந்து வாழ்த்த
நன்மாறன் வந்து வாழ்த்த
பொற்றா மரைக்கு ளத்துப்
போற்றரும் பலகை ஏறி
நற்றமிழ் காத்து நின்ற
நற்கவி வாணர் வாழ்த்த
இற்றைக்குத் தமிழ்நம் அன்னை
இமயத்தின் உச்சி கண்டாள்.

மீன்கொடி பாண்டி வேந்தர்
முதல்இடை கடையாம் சங்கம்
நான்மாடக் கூடல் தன்னில்
நலமுற வைத்துக் காக்கப்
போனதே காலம் யாவும்
பொற்புகழ் மீண்டும் நாட்ட
ஆனதோ நம்மால் ஏற்றம்
ஆக்கினார் முதல்வர் வாழ்க!

தமிழ்மொழிப் புகழி னோடு
முதல்வரின் புகழும் ஓங்கும்
தமிழ்நிலம் கோடி யாண்டு
முதல்வரின் பெருமை தாங்கும்
தமிழ்மொழி நூல்கள் யாவும்
முதல்வரின் சீர்மை பாடும்
தமிழ்த்திருச் சங்கம் வாழ்க!
முதல்வரும் வாழ்க! வாழ்க!

—டாக்டர் த. அமிர்தலிங்கம்



# பெண்ணிற் பெருந்தக்க யாவுள?

மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர்
திருமிகு இராம. வீரப்பன் அவர்கள்

அறிவு வளத்திலும், கல்வி நலத்திலும், சிந்தனைச் சிறப்பிலும் வீரப் பெருக்கிலும், கற்பின் பொற்பிலும் தமிழக மகளிர் ஏற்றம் பெற்றது இன்று நேற்றல்ல; அரசு மகளாகிய ஆதிமந்தியாரும், அறிவுத் திலகமாகிய அவ்வையாரும் வீரம் பாடிய மாசாத்தியாரும், வெற்றியைப் பாடிய காக்கைப் பாடினியாரும் சங்க காலத்தில் வாழ்ந்த நற்றமிழ்ப் புலவர்கள். அறிவின் பிழம்பான காரைக்கால் அம்மையாரும், தியாகத் திலகமாகிய திலகவதியாரும், பூக்களைச் சூடிக் கொடுத்தும், பாக்களைப் பாடிக் கொடுத்தும் பார்புகழ் கொண்ட ஆண்டாளும் இடைக்காலத்தில் வாழ்ந்த மாதர் மணிகளாவர். குடும்பத் தலைவியராகவும், கொள்கைத் தலைவியவராகவும் விளங்கிய கஸ்தூரிபா அம்மையார், அன்னை நாகம்மையாரைத் தொடர்ந்து இன்றைய நாளிலும் அறிவரசியரின் படை வரிசை, அறிவியல், வணிகம், கலை, இலக்கியம் முதலிய புதுபுதுத் துறைகளில் பட்டம் பெற்ற இளவரசிகளாக -வாழையடி வாழையாக பெண்கள் வளர்ந்திருப்பதை இன்று தமிழ் உலகம் கண்டு களிக்கிறது.

வாழ்க்கை என்பதே எண்ணத்தால் அமைவது; எண்ணம் என்பது மனத்தில் எழுவது. எந்த வாழ்க்கைக்கும் எண்ணம் தான் மூலம்; எண்ணுகிற மனம்தான் கருவூலம், எண்ணங்களின் பெருக்கமே வாழ்வின் வளர்ச்சியாக வடிவம் பெறுகிறது. எனவேதான், ''மனம் போல வாழ்வு'' என்று நம் நாட்டுப் பழமொழி கூறுகிறது. மனமானது பண்படவும், பயிற்சி பெறவும், மனத்தின் முயற்சிகள் சிறப்படையவும், சீரிய சிந்தனைச் செல்வம் செழித்தோங்கவும் உள்ளம் பற்றிப் படர்வதற்கான பற்றுக் கோடாக அமைவதையே ''கல்வி'' என்று உலகம் நெடுங்காலமாக அழைத்து வருகிறது. 'சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப் பழக்கம், வைத்ததொரு கல்வி மனப் பழக்கம்' என்று தமிழ் மூதாட்டியான அவ்வையார் அன்றே இதனைப் பாடியுள்ளார். உலகக் கல்வியாளர்கள் கல்வியின் அடிப்படையை, கல்வியின் நோக்கத்தை ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகஆராய்ந்து-உள்ளத்தை மேன்மை படுத்தும் ஒப்பற்ற சாதனமாகக் கல்வியை அமைப்பதுதான் பொருத்தம் என்று முடிவு கட்டியிருக்கிறார்கள்.

எனவே, கல்வி என்பது கல்லூரியோடு முடிந்து விடுவதல்ல; வாழ்க்கை முழுவதும் தொடர்ந்து நிகழும் அறிவுப் பயணமாக அமைவதற்கு இது ஆரம்பம். பட்டம் பெறுவது என்பது நெடிய வாழ்க்கைப் பயணத்தில் ஒரு மைல் கல்தான். ஆகவே, பயணத்தின் இறுதி இலக்கு அல்ல என்று இந்த நாட்டின் மாபெரும் சிந்தலையாளரும் தத்துவ ஞானியுமான டாக்டர் இராதாகிருஷ்ணன் கூறியுள்ளதையும் நான் நினைவூட்ட விரும்புகிறேன்.

இங்கே கல்விச் சாலைகளில் நீங்கள் பெறும் அறிவு, சமுதாய வீதிகளில் நீங்கள் செயற்படும்போதுதான் உரமும் ஊட்டமும் பெறுகின்றது. கல்லூரிகளில் கற்றுக் கொடுப்பதைக் ''கல்வி'' என்பதைவிட, கல்விக்குரிய கருவிதான் அங்கே வழங்கப்படுகிறது என்பதுதான் பொருந்தும் என்று அறிஞர் எமர்சன் ஒருமுறை குறிப்பிட்டார்; எனவே, கல்வி என்பது அழகுக்கான ஓர் அணிகலன் அல்ல; மனிதர்களின் அவசியத் தேவையாகவே, மக்களாட்சி மலர்ந்துள்ள இக்காலத்தில் கல்வி போற்றப்படுகிறது.

அறிவுச் செல்வத்தை அனைவருக்கும் வழங்க வேண்டும் என்ற அடிப்படையில் தான், அரசாங்கம் கோடிக்கணக்கான ரூபாய்களைச் செலவழிக்கிறது. முன்பெல்லாம் வசதி பெற்றவர்

களும், வாழ்க்கையில் வாய்ப்புடையவர்களும் தான் கல்லூரிக் கல்வியை எட்டிப் பார்க்க முடிந்தது. அப்படிப்பட்ட வாய்ப்பைப் பெற்ற வர்கள் புதிய அந்தஸ்தை அடைந்தவர்களாக, சமுதாயத்திலே உயர்ந்தவர்களாகக் கருதப்பட் டார்கள். இப்போது அந்த நிலைமை இல்லை. என்றாலும் கல்வி பயிலும் வாய்ப்பு அனைவருக் கும் இன்று வாய்த்திருக்கிறது என்று நாம் மகிழ்ச்சியடையும்போது, ஏறத்தாழ வாழ்வில் 16 ஆண்டுகள் செலவு செய்து நாம் பெறுகிற கல்விப் பயிற்சியும், பயிற்சியினால் விளையும் அறிவும், வாழ்வுக்குத் தேவையான ஆற்றலைப் பெறுவதற்கான அடிப்படையை நமக்கு அளித் திருக்கிறதா? என்ற கேள்வியை எழுப்பி அதற்கு விடை காண விழைகிறேன்.

இன்று பெற்ற பட்டங்கள், நாம் கற்றுக் கொண்ட பாடங்கள், அந்தப் பாடங்களுக்கு அடிப்படையான கல்வித் திட் டங்கள், நமக்கு எந்த இலட்சியத்தைச் சுட்டிக் காட்டுகின்றன என்று நீங்கள் எப்பொழுதும் எண்ணிப் பார்க்க வேண்டும். எனக்கு இதில் ஐயமுண்டு. ஏனெனில் 'கல்வியின் நோக்கம் இதுதான்' என்ற தெளிவான வரையறை இன்று வரை மாணவர் உலகத்துக்குத் தரப்படவில்லை என்றே நான் கருதுகிறேன். சாதாரணமாக நாம் பயணம் மேற்கொள்ளும்போது, கோவை செல்லுகிறவர்கள் சென்னை மத்திய இரயில் நிலையத்தின் வழியாய்ச் செல்ல வேண்டும். மதுரை செல்கிறவர்கள் எழும்பூர் இரயில் நிலை யம் வழியாகத்தான் பயணத்தைத் தொடங்க வேண்டும்.

இந்த ஊருக்குச் செல்கிறவர்கள் இந்தச் சந்திப்பில் மாறியாக வேண்டும் என்று, திட்ட வட்டமாக வரையறுப்பதுபோல, நமது அறிவுப் பயணத்தில் தெளிவு அமைந்துள்ளதா என்பது இன்றுவரை ஆராய்வதற்குரியதாகவே உள்ளது. சமுதாயமும், அரசும், கல்வித் துறை அறிஞர் களும் இது பற்றி விரிவாகச் சிந்திக்க வேண்டும் என்பது என்னுடைய அவா.

மகளிர் கல்வி என்பது தமிழுலகத்துக்குப் புதியதல்ல. கல்விக்குரிய கடவுளையே 'கலை மகள்' என்று அன்னை யாக்கித்தான் நாம் வழி படுகிறோம். 'அறிவும் அருமையும் பெண்பால ரின் குணங்கள்' என்று தொல்காப்பியரும், 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள' என்று திரு வள்ளுவரும், 'பெருந்தடங்கண் பிறைநுத லார்க்கு எல்லாம் பொருந்து செல்வமும் கல்வி யும் பூத்தன' என்று கம்பரும், 'பட்டங்கள் ஆள்வதும், சட்டங்கள் செய்வதும், பாரினில் பெண்கள் நடத்த வந்தோம், எட்டும் அறி வினில் ஆணுக்கு இங்கே பெண் இளைப்பில்லை காண்' என்று பாரதியாரும், 'மங்கையராகப் பிறப்பதற்கே நல்ல மாதவம் செய்திட வேண்டு மம்மா' என்று கவிமணியும், 'அச்சமும் மடமை

## நால்வரின் நற்றொண்டு

சொற்கோவும் தோணிபுரத்
தோன்றலும் நம்சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த்
தேசிகனும் — முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே
மாமறைநூல் தானெங்கே?
எந்தைபிரான் ஐந்தெழுந் தெங்கே?

—சிவானந்த மாலை

யும் இல்லாத பெண்கள் அழகிய தமிழ்நாட் டின் கண்கள்' என்று பாவேந்தர் பாரதிதாச னும், 'பொருந்து நற்கலை பூவை கற்பது திருந்தியே மிகும்' என்று வித்தகர் வேதநாயக ரும், 'ஓர் ஆண் கல்வி கற்றால் அவன் மட்டும் தான் அறிவு பெறுவான்; ஆனால் ஒரு பெண் கல்வி கற்றால் ஒரு குடும்பமே அறிவு பெற்ற தாகும்' என்றும் மகளிர் கல்வியின் மாட்சியை நமது பாவலர்களும் அறிஞர்களும் பலவாறாக பாராட்டியுள்ளனர்.

இவ்வளவு பாராட்டுக்குரிய கல்வியை, அதுவும் பட்டக் கல்வியைக் கற்கும் பெண் களில் பலர் திருமண வாழ்வை எதிர் பார்த்துப் படிப்பு முடிந்ததும் இல்லத்திலேயே இருந்து விடுகிறார்கள். நடுத்தர, நலிந்த குடும்பத்துப் பெண்கள், சம்பாதிப்பதற்காக வேலைக்கு விண்ணப்பம் போடும் அனுமதிச் சீட்டாகத்தான் தங்கள் கல்விப் பட்டத்தைப் பயன்படுத்துகின்றனர். இவற்றைக் காணும் போது, பாடுபட்டு மகளிர் கற்ற கல்வியின் பய னைச் சமுதாயம் முழுவதுமாகப் பெறாமல் போய்விடுகிறதே என்ற ஏக்கம் எங்களைப் போன்றவர்கட்கு ஏற்படுகிறது.

பெண்கள் பெறுகின்ற கல்வி அவர்களு டைய வாழ்வுக்கும், அவர்கள் வாழும் சமு தாயத்திற்கும் முழுவதுமாக பயன்படவேண் டும். திருமணமான பெண் மாமியாருடன் எப் படிப் பழக வேண்டும். விருந்தினரை எப்படி வரவேற்கவேண்டும், குடும்ப வாழ்வை எப்படி நடத்த வேண்டும், குழந்தைகளை எப்படி வளர்க்கவேண்டும், சமுதாய நலத்துக்கு எந்த வகையில் உழைக்கவேண்டும் என்பவைகளைப் பற்றியெல்லாம் ஜப்பான் முதலிய நாடுகளில் பயிற்றுவிக்கப்படுகின்றனவாம். நமக்கோ, அன்றாட வாழ்வில் பயன்படுகிறதோ இல் லையோ, திட்டப்படி விலங்கியல், விஞ்ஞானம் வணிகம், இரசாயனம், பௌதிகம், கணக்கு எல்லாம் கற்பிக்கப்படுகிறதே அதுபோல வாழ்க்கைக்குரிய மனப்பக்குவம், வாழ்வின் சூழல்களை உணர்ந்துகொண்டு உறவோடு பழ கும் வாழ்க்கைக் கல்வி பற்றி ஏதேனும் பாடங்

கள் உண்டா என ஒரு முதல்வரைக் கேட்டேன். நான் சொல்கிற பாடம் இதுவரையில் இல்லாதபாடம் என்று அவர் விடையிறுத்தார்.

ஓர் அறிஞர் குறிப்பிட்டதுபோல, ''கடலாழத்தைப் பற்றியும், வான்மீன்களைப் பற்றியும், பொருள்களின் இயல்புகளைப் பற்றியும் ,கற்பதில் ஆர்வம் காட்டும் நமக்கு மனித மனநுட்பங்களைப் பற்றியும், பிறரோடு மாறுபடாமல் ஒத்துப் போகும் பரிவுணர்ச்சியை வாழ்க்கையில் நாம் பெறவும் கற்பிக்கப்படவில்லை'' என்றுதான் கருத வேண்டியிருக்கிறது.

மகளிர் உள்ளக் கருத்துக்களை, வாழ்க்கை நிலைகளை, மகளிரே தமக்குள் கூடிப்பேசி பல அரிய சீர்திருத்தங்களை அவர்களுக்குள்ளேயே வகுத்தாக வேண்டிய கட்டாயத்தில் நாம் இருக்கிறோம். மகளிர் உரிமைக்காகக்கூட, ஆதிக்கத்தால் அரிவையரை ஒரு காலத்தில் அடக்கி வைத்த ஆடவர்களே மீண்டும் மீண்டும் வந்து வாதாடுவதும் ஒரு வேடிக்கைதான். அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு' என்று அவர்களைஆடவர்களினம் தள்ளி வைத்திருந்த காலமும் உண்டு. இன்று ஆடவர்கள் தான் பெண்ணின் பெருமையையும் எடுத்துப் பேசுகிறார்கள்.

பெண்ணின் நலனை, உரிமையைப் பெறவும், அதற்குரிய கடமையையும், பாவையர்களே மேற்கொள்ள வேண்டுமே தவிர, இன்னும் அந்தப்பணியை ஆடவர் வசம் ஒப்புவிப்பது எலியின் சுதந்திரத்திற்குப் பூனை போராடுவதற்கு ஒப்பாகும் என்பதையும் நாம் உணரவேண்டும். உண்மையிலேயே ஆற்றல், சக்தி, திறன் என்பவைகள் பெண்ணிடத்தில் தான் மிகுதியும்உண்டு. 'ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே' என்கிறோம். நல்லது ஆவதும் பெண்ணாலேதான், தீயவை அழிவதும் பெண்ணாலேதான் என்று கருதுவதே பொருத்தம். ''சக்தி இல்லை என்றால், சிவனேஎன்றுகிட'' என்றுகூட ஒரு பழமொழியும் உண்டு. எனவே ,பெண் இல்லை என்றால் ஆடவருக்குச் சக்தி இல்லை என்றுதானே பொருள்.

போர்க்களத்திலே வீரம் விளைத்த வரலாறுகளைச் சொல்லும்போது வெற்றி பெற்ற வீரர்களை மட்டுமே சொல்லிக் கொண்டிருக்கிறோம். ஆனால், வேலுநாச்சியார், இராணி மங்கம்மாள், ஜான்சி ராணி, ஜோன் ஆப் ஆர்க் முதலிய வீராங்கனைகள் - வளையணிந்த கரங்களில் வாளேந்தவும் முடியும்; சோறு படைக்கும் கரங்களால் வீறு படைத்த வரலாறுகளை உருவாக்கவும் முடியும் என்பதற்கான சின்னங்கள் என்பதை ஏனோ நாம் நினைவுபடுத்திக் கொள்வதில்லை. அரசியலுக்குக்கூட மகளிரின் அறிவாற்றல் இன்று நேற்றல்ல, ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே எவ்வளவுநேர்த்தியாகப் பயன்பட்டது என்பதற்குத் தொண்டைமானிடம்தூதுபோய்ப்போர்செய்யநினைத்தவேந்தர்களின் பூசல் போக்கி, தன் வாதத் திறமையால் அறிவுறுத்திய அவ்வையாரை எண்ணிப் பார்க்கையில், உலக அரங்கில் அரசுகளின் தூதுவர்களாக அன்றே மகளிர் வெற்றியோடு விளங்கினார்கள் என்பது நமக்கு அளவில்லாப் பெருமையை அளிக்கிறது. இவ்வாறு எல்லாப் பணிகளையும் எல்லா நிலைகளிலும் எல்லா வகைகளிலும் எப்போதும் ஆற்றலோடு மகளிரால் ஆற்ற முடியும் என்பதை ஜப்பான், ருஷ்யா, ஜெர்மானிய நாட்டு மகளிர், உலகுக்கு எடுத்துக் காட்டி வருகின்றனர். அத்தகைய வளர்ச்சி அன்னைத் தமிழகத்துக்குப் பெண்களுக்கும் அமையவேண்டும் என்பது எங்களைப் போன்ற சீர்திருத்த இயக்கத்தினரின் பெரு வேட்கையாகும்.

அண்மையில் ஆப்பிரிக்க நாட்டுச் செய்தித் துணுக்கு ஒன்றைப் படித்தேன். அந்த நாட்டு ஆசிரியர் ஒருவர் ஆசிரியப் பதவியிலிருந்து விலகினார். அவர் விலகியதற்காகக் காட்டிய வேதனைக்குரிய காரணம் நம்முடைய சிந்தனைக்குரிய ஒன்றாகும்.

அவர் சொன்னார்: ''நான் வேதனையோடுதான் விலகுகிறேன். ஏனென்றால், நான் தலைமை ஆசிரியருக்குக் கட்டுப்படுகிறேன். தலைமை ஆசிரியரோ மேலதிகாரிகளுக்குக் கட்டுப்படுகிறார். மேலதிகாரியோ அமைச்சருக்குக் கட்டுப்படுகிறார். அமைச்சரோ முதலமைச்சருக்குக் கட்டுப்படுகிறார். முதலமைச்சரோ பொதுமக்களுக்குக் கட்டுப்படுகிறார். ஆனால், பொதுமக்களின் செல்வங்களான மாணவ மணி

---

## சிறையிருந்த செல்வியின் ஏற்றம்

இராவணனால் சிறையெடுக்கப்பட்ட சீதை அசோக வனத்தில் ஓராண்டுக் காலம் சிறையிருந்தாள்; அவள் நினைத்திருந்தால் இலங்கையைத் தன் கற்பின் திறத்தால் ஓர் நொடியில் சுட்டெரித்து, இராமபிரானை அடைந்திருக்க முடியும். இராமபிரான் தன் வில்லின் ஆற்றலால் இராவணனை அழித்துத் தன்னைச் சிறைமீட்டுச் செல்ல வேண்டும்; அதுவே அவனுக்குப் பெருமை என்பதனாலேயே சீதை பொறுத்திருக்க நேர்ந்தது; இதனை சீதையே

''அல்லல் மாக்கள் இலங்கைய தாகுமோ?
எல்லை நீத்த உலகங்கள் யாவுமென்
சொல்லினாற் சுடுவேன்அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசென்று வீசினேன்''

என அனுமனிடம் கூறுவதால் தெரிந்து கொள்ளலாம்.

---

களோ யாருக்கும் கட்டுப்படுவதில்லை-கட்டுப் படுவார்கள்என்றநம்பிக்கையும்தெரியவில்லை'' என்று அவலத்தோடு விலகல் கடிதத்தை முடித் திருந்தார். எனவே, மாணவர்களிடையே அமைதியின்மை என்பது நம் நாட்டிலே மட்டு மல்ல, நானிலமெங்கும் பரவலாகக் காணப்படு கிற ஒரு புதிராகத்தான் உள்ளது.

அலட்சியப் போக்கும் இந்த அமைதியற்ற தன்மைக்கு அடிப்படையாக அமைந்துள்ளன என்பதையும் இந்த நேரத்தில் சுட்டிக் காட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

கல்லூரிக்கு அனுப்பும் வரையில்தான் நமது கடமை; பிறகு அவனைப் பொறுப்புள்ள வனாக மாற்றுவது கல்வி நிலையத்தின் கடமை என்று பிறர் மீது பொறுப்பைச் சுமத்திவிட் டுத்தட்டிக் கழிக்கும் மனப்போக்கினைக் கொண்டிருக்கிறோம் என்று தந்தை என்ற வகையில் என்னையும் சேர்த்தே குறிப்பிடு கிறேன். ''பள்ளிக்கூடத்தை இரண்டு நாளாய் மூடி விட்டார்கள். இந்தப் பிள்ளைகளை என் னால் கட்டுப்படுத்த முடியவில்லையே'' என்று அன்னைமார்கள் இன்றும் பேசுவது, பொறுப் பைப் பிறர் மீது சுமத்தும் பெற்றோர்களின் போக்கின் ஆரம்ப நிலையாகும். பெற்றோர், மாணவர், கல்வியாளர் என்று முக்கூட்டு அணி யாகத்தான் கல்வியின் போக்கை நாம் வகுக்க வேண்டும். இதுபற்றி அறிவுலகம் ஆழ்ந்த கவலை கொண்டுள்ளது. ஆனால் எந்த நிலை யிலும் பெண்கள் எந்தச் சலனமும் அசைவும் இல்லாமல் அமைதியான நீரோடையாகவும் அசைகின்ற தென்றலாகவும் விளங்கவேண் டும். இதுதான் நமது நாட்டுப் பெண்மையின் இயற்கைப் பண்பும்கூட.

கடந்த 150 ஆண்டுகளில் உலகில் ஏற் பட்ட அறிவியல் வளர்ச்சி, ஐயாயிரம் ஆண்டுக் காலப் பண்பாட்டையே அசைப்பதாக வளர்ந்து விரிந்து வருகிறது என்று பேரறிஞர் பெர்ட் ரண்டு ரசல் குறிப்பிட்டுள்ளார். இப்படி அறிவியல் சிந்தனைகள் நொடிக்கு நொடி வளர்ந்து கொண்டிருக்கும் இந்த விஞ்ஞான யுகத்தில், நமது சமுதாயம், குறிப்பாகத் தமிழ்ச் சமுதாயம், அதிலும் குறிப்பாகப் பேரறிஞர் அண்ணா சுட்டிக் காட்டியதுபோல, ஏழை எளிய மக்கள் நிரம்பிய இந்தச் சமுதாயம், எப் படிப்பட்ட மூட நம்பிக்கைகளில் பிற்போக்குச் சிந்தனைகளில் உழன்றுகொண்டு பின்தங்கி யுள்ளது என்பதைக் கல்வி ஒளிதான் நமக்குக் கண்ணாடிபோல் காட்டி நம்மைத் திருத்த வேண்டும்.

மனித ஆற்றல் என்பது சூழ்நிலைக்கோ, சுற்றுப்புறத்துக்கோ, அடிமையாகி அமிழ்ந்து விடுவதல்ல. விலங்குகள் சூழ்நிலைக்கு இரை யாகலாம். சூழ்நிலைக்கு ஏற்பப் பறவைகள் மாறலாம். ஆனால் மனிதனோ சூழ்நிலையைத் தனக்கு அடிமை கொள்வான்-தனக்கு ஏற்ற வாறு சூழ்நிலையை மாற்றுவான். அப்படி மாற் றிக்கொண்ட வரலாறுதான் அறிவியலின் வர லாறு. அந்த அறிவியல் விரைவுக்கு ஏற்ப மகளிர் இனம் தம்மை மாற்றிக் கொண்டு நல்ல வளர்ச்சி பெற வேண்டும்.

வேலையின்மைச் சிக்கல் பெரிதாக வளர்ந் துள்ள இன்றைய நிலையிலும் மகளிரிடத்தில் மட்டுமே சிறப்பாக மிளிரும் தாய்மை, இல் லறம் காக்கும் திறமை, மனைகளை அலங் கரிக்கும் மாண்பு, இயல்பான பொறுமை, மனத் தெளிவு, நிதானம், நளினம், புலமை, பொறுப்பு திறனாய்வு முதலிய பண்புகள் எல்லாவற்றை யும் பரிமளிக்கச் செய்யும் பல்துறை வாய்ப்பு களை, சமுதாய வாழ்வுக்குப் பயன்படும் வகை யில் ஏற்படுத்துவதற்கான முயற்சிகளும், கல்வி உலகத்தால், சிந்திக்கப்பட்டு ஆவன செய்யப் பட்டு வருகின்றன.

பல துறைகளிலும் மகளிர்க்கான வாய்ப்புக்கள் மிகுதியாக்கப்பட்டு வருகின்றன. பெண்களுக் கான உயர்நிலைக் கல்வி, நாட்டுக்கு நன்மை தருவதாகவும், நாட்டின் நன்மைக்கு அவர் களைப் பயன்படுத்திக் கொள்ளும் வாய்ப்பினை தக்க வகையில் அவர்களுக்கு வளர்ப்பதாகவும், அவர்களுக்கு வருவாய்க்கு ஏற்ற வழிவகுப்ப தாகவும், சமுதாயத்தில் அவர்களுக்குள்ள மதிப் பினை மேலும் உயர்த்தவல்லதாகவும் மிளிர பலவகைகளில் சிந்திக்கப்பட்டு வருகின்றன.

பெண்கள் பேதையர்கள் அல்ல, மேதை கள். 'தொட்டிலை ஆட்டும் கை தொல்லு லகை ஆளும் கை'. சமுதாயத்தில் சமய-மத- இனங்களின் பேரால் கடைப்பிடிக்கப்பட்டு வரு கின்ற கண்மூடிப் பழக்கத்தைப் பெண்கள் தங்கள் கல்வி அறிவால் திருத்த வாய்ப்புண்டு. திருத்தியாகவும் வேண்டும். சமுதாயத்தின் உயர்வு மகளிரின் கரங்களில்தான் உள்ளது. மூடத்தனத்தின் முடை நாற்றம் வீசுகின்ற காடு மணக்க வரும் கற்பூரப் பெட்டகமாகவும் நீடுதுயில் நீக்கப்பாடிவரும் நிலவாகவும், வேண் டாத சாதி இருட்டு வெளுக்க வந்த தூண்டாத மணிவிளக்காகவும், அறம்பாட வந்த அறிவை யர்களாகவும், மறம் பாட வந்த மாதரசிகளாக வும், மண்டும் மதங்கள் அண்டாத நெருப்பாக வும், அயலார் எதிர்ப்புக்கு அணையாத விளக் காகவும், கலைச் செல்வியரான பெண்கள் புக ழோடு திகழ வேண்டும். ஒளிர வேண்டும். மேன்மைபெற்று மிகச் சிறப்பாக மிளிரவேண் டும். புதிய உலகுகாணப் புறப்படும் வீராங் கனைகளாக பெண்கள் விளங்க வேண்டும். ஆம் சிவமோடு சக்தி சரிநிகர் சமானமாக நின்று இந்த வையத்தைப் பாலித்திட வேண்டும்.

இருபது வயதுப் பெண்ணுக்கு 25 வயது இளைஞரைத் திருமணம் முடிக்கிறோமே, அதி லிருந்து 25 வயது மகனின், அறிவாற்றலுக்கு

நிகர் 20 வயதுப் பெண்ணின் அறிவு என்று தானே நமது முன்னோர்கள் நினைத்திருக்கிறார்கள். பெண் எங்கே ஆணைவிட உயர்ந்து விடப் போகிறாளோ என்ற அச்சத்தில்தான் நமது ஆண்டவனையேகூட '-மங்கைபங்கன்'. 'மாதொரு பாகன்' என்று அர்த்தநாரீசுவரர் வடிவத்தை ஏற்படுத்தி ஆணும் பெண்ணும் சமம் என்று சமாதானம் செய்ய முயன்றிருக்கிறார்கள்.

உலகில் தாய்க் குலம்தான் நாகரிகத்தின் தலைவாயிலுக்கு மனிதனை அழைத்துச்செல்கிறது. காடுமேடுகளில் ஓடிக் கண்ணில்படும் விலங்குகளை வேட்டையாடித் தின்றமனிதனை நாகரிகப்படுத்தியதும் பெண்தான். ஆக்கத் தொழிலுக்கு மனிதனை ஆளாக்கி நெறிப்படுத்தியவளும் பெண்தான் என்று மானிடத்தொல்லியல் அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

பெண்கள் பிறக்கும்போதே தியாக வடிவங்களாகப் பிறக்கின்றனர். தியாகத் திருவிளக்குகளாகவே வளர்கின்றனர். பிறந்து மழலை மொழி பேசும் பருவம் தொடங்கி, சிறுமியாகி, பருவக் குமரியாகி, காதல் மனைவியாகி, அன்புத் தாயாகி, குடும்பத் தலைவியாகி, நரை முதிர்ந்த மூதாட்டியாகி, வாழும் ஒரு பெண்ணின் வாழ்வு, மாசற்ற, தனக்கென வாழாத, ஒரு தியாக வாழ்வாகத்தான் திகழ்கிறது. ஆண்டவன், தான் எங்கும் இருக்க முடியாது என்பதற்காகவே வீட்டுக்கு ஓர் அன்னையைப் படைத்தான் என்று டால்ஸ்டாய் கூறியதுண்டு.

ஒரு நாட்டின் சீர்திருத்தச் சிந்தனைகள் செயல் வடிவம் பெறுவதற்கு அந்நாட்டு மகளிரே பெருங்காரணமாவார்கள். சாதிச் சிக்கல்களாலும், மூட நம்பிக்கை முட்புதர்களாலும், பிற்போக்குக் கருத்துக்களாலும், பின்தங்கியிருக்கும் நமது சமுதாயத்தில், முற்போக்கு உணர்வுகளை முளைத்திடச் செய்யும் முயற்சியில் மகளிர் தான் முன் நிற்கவேண்டும்.

ஆடவர்கள் அவசரக்காரர்கள், ஆத்திரக்காரர்கள்; மகளிரோ நிதானமானவர்கள், உறுதியானவர்கள். சாதியை ஒழிப்பதாக ஆடவர்களால் நன்றாகப் பேசமுடியும். ஆனால் மகளிரால் நயமாகச் செய்துகாட்ட முடியும். கோமளா, கோகிலம், கமலா, விமலா என்றுதான் பெண்களின் பெயர்கள் வழங்கப்படுகின்றன.

படிக்கும்போது வாலிபனாகிய முனிசாமியும், வேலை பார்க்கும்போது நடுத்தர வயதான கந்தசாமியும் குடும்பத் தலைவரான பிறகு, முனிசாமி முதலியாராகவும், கந்தசாமி பிள்ளையாகவும் மாறிவிடுகின்றனர். ஆனால் செல்வி விமலா, திருமதியானதும் விமலாதானே தவிர, விமலா நாயுடுவாகவோ, விமலா பிள்ளையாகவோ மாறுவதில்லை. இவ்வாறு சாதியை ஒட்ட வைத்துக் கொள்ளாத உயர்ந்த இனமாக நம்மிடையே பெண்ணினம் உள்ளது.

---

## ஊரும் காடும்

திருக்கோயில் இல்லாத திருவில் ஊரும்
திருவெண்ணீ றணியாத திருவில் ஊரும்
பருக்கோடிப் பத்திமையாற் பாடா ஊரும்
பாங்கினோடு பலதளிகள் இல்லா ஊரும்
விருப்போடு வெண்சங்கம் ஊதா ஊரும்
விதானமும் வெண்கொடியும் இல்லா ஊரும்
அருப்போடு மலர்ப்பறித்திட் டுண்ணா ஊரும்
அவையெல்லாம் ஊரல்ல; அடவி காடே.

—திருநாவுக்கரசர்

---

•

சாதி வேறுபாடுகள் சமுதாயத்தில் நீக்கப்பட்டேயாகவேண்டும். காதல் மணமும் கலப்பு மணமும் சாதி ஒழிப்புக்குப் பெரிதும் உதவும் சாதனங்களாகும். காதல் மணம் என்றஉயர்ந்த உன்னதமான இலட்சியத்தை அடைய முயலும் போது, சில குறைகள்-குற்றங்களாக ஏற்பட்டு விடுவதையும் இளைய சமுதாயத்தினரிடம் நாம் காண்கிறோம். என்றாலும், மாசற்ற மனங்களுக்கிடையே மலர்கின்ற அந்த மகத்தான காதல் கவியைச் சமுதாயம் இரு கை நீட்டி வரவேற்று மகிழ்கிற அளவிற்கு, கல்வி அறிவு பெற்றவர்கள், காதலில் கண்ணியத்தையும், கட்டுப்பாட்டையும், கடமை உணர்வையும் வளர்த்துக் கொள்ள வேண்டும். 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' என்ற காட்டு முறைக்கு ,கற்றுத் தேர்ந்தவர்கள் இரையாகி விடக் கூடாது.

காதல் மலர்ந்த நெஞ்சங்களில் வேறுபாடோ ,வெறுப்போ அணுவளவும் விளைவதில்லை. இந்த வகையில் சமுதாயச் சீர்திருத்தங்களுக்கு, முன்னணியில் வந்து நிற்க படித்த மகளிர் பேரார்வம் காட்ட வேண்டும். தம்முள் கலந்து வாழும் சீர்திருத்தக் காதல் வாழ்வு எல்லோரிடமும் துளிர்க்குமானால் , குடும்ப நலத் திட்டத்துக்கு அரசு வந்து முரசறைய வேண்டிய அவசியம் இல்லை. இயல்பானகுடும்ப வெற்றியாக அத்திட்டம் ஏற்றம் பெறும்.

தந்தை பெரியார் பெண்களுக்கு ஆற்றிய வீர உரையையும் நான் இங்கே நினைவூட்ட விரும்புகிறேன். ''தற்போது பெண்களுக்குப் படிப்பும் வேலையும் இல்லாததால்தான் ஆண்களைச் சார்ந்தே வாழ வேண்டுமென்கிற நிலை அவர்களிடம் இருக்கிறது. பெண்கள் ஆண்களைப் போன்று, துணிவாக நடந்துகொள்ள வேண்டும், பெண்கள் தனியாக வாழ முடியும்; எதையும் சாதிக்க முடியும் என்கிற நிலையில் வாழ வேண்டும். சுதந்திரமாக, கவலையற்று வாழ, தொல்லையற்று வாழ அறிவைக் கொண்டு சிந்தித்து அதன்படி பெண்கள் நடந்து கொள்ள வேண்டும்'' என்று கூறியுள்ளார்.

# மதுரை ஆலயமும் சான்றோர் வரலாறுகளும்

R. பஞ்சநதம், திருச்சி

## 1. இந்திரன் வழிபட்டது

தேவலோகத்திற்குத் தலைவனான இந்திரன், விசுவரூபன் என்பவனையும் விருத்திராசுரனையும் கொன்றதால் அவனைப் பிரமகத்தி தோஷம் (கொலைப்பாவம்) பற்றிக் கொண்டது. இந்திரன் அப்பாவத்தைப் போக்கிக் கொள்ளத் தனது குருவான வியாழ பகவானின் உபதேசப்படிப் பல தலங்களுக்கும் யாத்திரை



செய்தான். கேதாரம், காசி, காஞ்சி முதலிய சிவத்தலங்களைத் தரிசித்து கடம்பவனமாகிய மதுரையை அடைந்தான். அப்போது அவனைப் பற்றியிருந்த பிரமகத்தி நீங்கியது. அவ்விடத்தில் ஓர் கடம்பமரத்தினடியில் ஒளிப்பிழம்பாய் முளைத்த சிவலிங்கத்தைக் கண்டான். கருவாகி முளைத்தெழுந்த சிவக் கொழுந்தை ஆயிரங் கண்ணுங் களிப்பக் கண்டான்.

இந்திரன் தேவதச்சனை அழைத்து ஓர் விமானம் அமைக்க ஏவினான். அப்போது சூரிய மண்டலம் போல் ஓர் விமானம் விண்ணினின்றும் இறங்கி வந்தது. எட்டு யானைகளும், முப்பத்திரண்டு சிங்கங்களும், 64 சிவகணங்களும் தாங்கப்பெற்று, தேவதச்சனால் ஆக்கப்பெற்ற அவ்விமானத்தைப் பெருமானுக்கு நிழலாக அமைத்தான். இது இந்திர விமானம் எனப்படும். பொற்றாமரைக் குளத்தில் நீராடி பொற்றாமரை மலர்களைப் பறித்து வந்து பெருமானை வழிபட்டான். திருமஞ்சனம் தூபம், தீபம், பஞ்சகவ்வியம், திருவமுது முதலிய பொருள்களைக் கொண்டு பெருமானைச் சிவாகமப்படி அன்பு பெருகப் பூசைசெய்து வணங்கிப் போற்றலானான்.

''அங்கணா போற்றிவாய்மை ஆரணா
போற்றி நாக
கங்கணாபோற்றி மூலகாரணாபோற்றி
நெற்றிச்
செங்கணாபோற்றி ஆதிசிவப் பரஞ்சுடரே
போற்றி
எங்கள்நாயகனே போற்றி ஈறிலாமுதலே
போற்றி''

''யாவையும் படைப்பாய் போற்றி யாவை
யும்துடைப்பாய்போற்றி
யாவையும் ஆனாய்போற்றி யாவையும்
அல்லாய் போற்றி

## பக்தர்களைப் பயமுறுத்தலாமா?

எதிர்பாராத விதமாக உங்கள் முகவரிக்கு ஒரு கடிதம் வரும். அதைப் பிரித்துப் படித்துப் பார்த்து மனம் குழம்பிப் போவீர்கள். அப்படி என்ன அதில் எழுதியிருக்கும் என்றா கேட்கிறீர்கள்? ''இது இந்த ஆண்டவனின் கட்டளை. இதில் கண்டிருக்கும் வாசகங்களை நீங்களும் 16 படிகள் எடுத்து உங்களுக்கு வேண்டியவர்களுக்கு உடனடியாக அனுப்பியே தீர வேண்டும். அனுப்பிப் பலன் பெற்றவர்கள் இன்ன இன்னார்., அனுப்பாமல் புறக்கணித்துத் துன்பம் பெற்றவர்கள் இன்ன இன்னார்..'' என்பதாக அந்தக் கடிதம் மொட்டையாகச் செய்திகளை கூறி உங்களை மிரட்டும். நீங்கள் அந்தக் கடிதத்தில் கண்டபடி செய்வதா வேண்டாமா என்று திண்டாடிப்போவீர்கள்.

அப்படிப்பட்ட கடிதங்கள் உங்கள் கைக்கு வருமானால் கவலைப் படாமல் படித்துச் சிரித்துக் விடுங்கள். இத்தகைய கடிதம் எழுதிப் போடுவதால் அதிர்ஷ்டமோ ஆதாயமோ வந்து விடாது., எழுதிப் போடாதால் துன்பமோ துரதிஷ்டமோ தொடராது. கருணைக் கடலாகிய கடவுளின் அருமையும் பெருமையும் உணராத சிலர், இத்தகைய மூடநம்பிக்கையைவளர்த்து கடவுளுக்கே களங்கம் கற்பிக்கிறார்கள். அவர்கள் செயலுக்கு ஊக்கம் தராமல் இருப்பதே, நாம் இறைவனுக்குச் செய்யும் உண்மைத் தொண்டு. முருகன் துணையும், இராமஜெயமும் நேரம் நமக்குக் கிடைக்கும்போது மனம் ஒன்றி எழுதி வருவது நல்ல பலனை உண்டாக்கும்.

---

யாவையும் அறிந்தாய்போற்றி யாவையும்
மறந்தாய் போற்றி
யாவையும் புணர்ந்தாய்போற்றியாவையும்
பிரிந்தாய் போற்றி''
—பரஞ்சோதியார்

இவ்வாறு வழிபட்ட இந்திரனுக்குப் பெருமான், ஆண்டு தோறும் சித்திரைப் பூரணையில் வந்து பூசிக்கும்படிக் கூறிப் பல வரங்களை அருளினார். இந்திரன் பிரியா விடை பெற்றுப் பொன்னுலகடைந்து சோமசுந்தரக் கடவுளை மறவாத சிந்தையுடன் ஆட்சி புரிந்து வந்தான்.

### 2. மீனாட்சியம்மை திருமணம்

மலையத்துவச பாண்டியன், மனைவி காஞ்சனமாலை இருவருக்கும் மகப்பேறு இல்லாமையால் புத்திரகாமேட்டியாகம் செய்தனர். அப்போது உமாதேவி மூன்று தனங்களையுடைய ஓர் பெண் குழந்தையாக வேள்விக் குண்டத்தினின்றும் தோன்றினாள். குழந்தையின் தோற்றத்தைக் கண்டு அரசன் வருந்தும்போது பெருமான் அசரிரியாக ''இக் குழந்தைக்குக் கணவன் வரும்போது ஓர் தனம் மறையும்'' என்று கூறினார். பெருமான் கட்டளைப்படி குழந்தைக்குத் தடாதகை எனப் பெயரிடப்பட்டது. குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தது. வில் வாள் முதலிய கலைகளில் சிறந்து விளங்கினாள். பின்பு மலையத்துவசன் விண்ணுலகடையவே தடாதகை அரசு முறை வழுவாதபடி செங்கோல் செலுத்தி வந்தாள். கன்னி யாண்டதால் கன்னிநாடு எனப் பெயர் பெற்றது.

தடாதகை மணப் பருவத்தை அடைந்தாள். நால்வகைப் படைகளுடன் புறப்பட்டுச்சென்று திக்குவிசயஞ் செய்து வென்றாள். இறுதியாகத் திருக்கைலாயத்தை அடைந்து சிவகணங்களுடன் சிவபெருமானையும் கண்டாள். கண்டவுடன் மூன்று தனங்களில் ஒன்று மறைந்தது. தடாதகை நாணங்கொண்டு நின்றாள். முன் அறிவித்தபடி பெருமானே கணவன் என்பது புலப்பட்டது. திருமணத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. வீதிகளும் வீடுகளும் அலங்கரிக்கப்பட்டன. திருமால் முதலிய தேவர்களும் முனிவர்களும் வந்திருந்தார்கள்.

திருமணத்துக்குரிய நல்வேளையில் முரசங்கள் ஒலித்தன. சங்குகள் முழங்கின. சிவபெருமானுக்குப் பக்கத்தில் தடாதகை வீற்றிருந்தது கற்பகத்தருவில் மலர்ந்த பூங்கொடி போல் இருந்தது. மேலும் இருவருடைய காட்சி பண்ணும் இசையும், நீரும் தண்மையும், பாலும் சுவையும், மலரும் மணமும், மணியும் ஒளியும் வெவ்வேறு வடிவு கொண்டிருந்த தன்மையைப் போன்றிருந்தது.

''பண்ணுமின் னிசையும் நீரும் தண்மையும்
பாலும் பாலில்
நண்ணுமின் சுவையும்பூவும் நாற்றமும்
மணியும்அங்கேழ்
வண்ணமும் வேறுவேறு வடிவுகொண்டி
ருந்தாலொத்தது
அண்ணலும் உலகம் ஈன்ற அம்மையும்
இருந்ததம்மா''
—பரஞ்சோதியார்.

மணமக்களின் கோலத்தைக் கண்ட மங்கைகள் மணமக்களைப் பலவாறு புகழ்ந்து பேசினர்.

திருமணச் சடங்குகள் நிறைவேறின. பிரமதேவன் உடனிருந்து நடத்தினான். சிவபெருமான் திருமங்கல நாணைப் பிராட்டியாருக்குச் சூட்டினார். எல்லோரும் கண்பெற்ற பயனைப் பெற்றனர். பங்குனி உத்திர நாளில் திருமணம் நடந்ததாகக் கூறுவர். தடாதகை பிராட்டியே

மீனாட்சியம்மையாக விளங்குகிறார். பெருமான் திருமணஞ்செய்தருளியது பெருமான் போகியாய் இருந்து உயிர்களுக்குப் போகத்தை அருளுவதை நினைப்பூட்டும்.

பின்பு சிவபெருமான் தாம் உலகில் அரசு நடத்திக் காட்டத் திருவுளங்கொள்ள இடபக் கொடி மீன்கொடி ஆகியது. பாம்புகள் அணிகளாயின. கொன்றை மாலை வேப்பம்பூமாலையாகியது. புலித்தோல் பீதாம்பரமாகியது. சந்திரன்முடி வயிரமுடியானது. சோமசுந்தரர் சுந்தரபாண்டியனாய்க் கோலங்கொண்டு விளங்கினார். சிவகணங்கள் மானுடவடிவு கொண்டனர்.



*பொற்றாமரைக் குளம்*

பாண்டியர் கோலம்பூண்ட சுந்தரப்பெருமான் மக்களுக்கு அரசனாகவும், பகைவர்களுக்குச் சிங்கமாகவும், உலக இன்பங்களைவெறுத்த ஞானிகளுக்கு முழுமுதலாகவும் விளங்கினார்.

## 3. மூர்த்தி நாயனார்

பாண்டி நாட்டில் மதுரையில் வைசியர் குலத்தில் மூர்த்திநாயனார் என்பவர் தினந்தோறும் சோமசுந்தரப் பெருமானுக்குச் சந்தனக் காப்பிடச் சந்தனம் அரைத்துக் கொடுத்து வந்தார். கருநாடக தேசத்து மன்னன் பாண்டியனை வென்று நாட்டைக் கைப்பற்றினான். அவன் சமண சமயத்தைச் சார்ந்தவன். நாட்டுமக்களையும் சமண சமயத்தைச் சாரும்படி எண்ணினான். மூர்த்திநாயனாரையும் அவ்வழியில் திருப்ப எண்ணி அவருக்குச் சந்தனக்கட்டைகள் கிடைக்காதபடி செய்தான். நாயனார் கோயிலுக்குச் சென்று பெருமானிடம் ''பெருமானே, சந்தனக் கட்டைக்கு முட்டுவந்தாலும் கைக் கட்டைக்கு முட்டில்லை'' என்று சொல்லி வட்டந்திகழ் பாறையில் தமது முழங்கையை வைத்து உள்ளெலும்பு கரையும் வரையில் தேய்த்தார். இதைச் சேக்கிழார், ''வட்டந்திகழ் பாறையின் வைத்துமுழங்கை தேய்த்தார். கட்டும் புறந்தோல் நரம்பென்பு கரைந்துதேய'' என்று காட்டுகிறார். பெருமான் அசரீரியாக ''உனக்குத் துன்பம் விளைவித்த மன்னன் அழிவான், நீயே நாட்டின் அரசனாய் வந்து சைவ சமயத்தை வளர்ப்பாயாக'' என்று சொல்லி யருளினார். தேய்த்த கையும் வளர்ந்தது. அரசனும் இறந்தான். அரசனுக்குப் புதல்வனில்லாமையால், அமைச்சர்கள் புதிய அரசனைத் தேர்ந்தெடுக்க ஓர் யானையை அனுப்பினர். அது பெருமான் சந்நிதியில் இருந்த மூர்த்தி நாயனாரைத் தேர்ந்தெடுத்து, அவரை முதுகின்மேல்வைத்து வந்தது. அமைச்சர்கள் அவரைச் சிங்காதனத்தில் இருத்தி முடிசூட்டினார்கள். நாயனார் திருநீறே அபிஷேகப் பொருளாகவும், உருத்திராட்சமே ஆபரணமாகவும், சடை முடியே கிரீடமாகவும் கொண்டு நெடுங்காலம் அரசாண்டு




## "இதோ உத்தம மனிதன் வருகின்றான்"

திருவொற்றியூர்த் தேரடித் தெருவில் நிர்வாண சந்நியாசி ஒருவர் அமர்ந்திருப்பது வழக்கம். அவர் அவ்வழியே போகின்ற ஜனங்களைப் பார்த்து ''இதோ கழுதை போகிறது'' ''இதோ மாடு வருகிறது'' என்றெல்லாம் அவர்தம் குணங்களைச் சுட்டி இகழ்ச்சிபடப் பேசுவதும் வழக்கமாக இருந்தது. திருவொற்றியூர் தியாகராச பெருமானை வணங்க வந்த வள்ளலார் ஒரு நாள் தேரடித் தெரு வழியாக வந்தபோது, முதன் முறையாக அந்த நிர்வாண சந்நியாசி தன் மானத்தை மறைத்தபடி ''இதோ உத்தம மனிதன் வருகின்றான்'' என்று கூறினார். வள்ளல் பெருமான் அந்த நிர்வாண சந்நியாசியைப் பார்த்து சில சொற்கள் கூற, அன்றிரவே அச் சந்நியாசி திருவொற்றியூர் ஊரைவிட்டே போய் விட்டார். சந்நியாசிகளே யாயினும் மக்களிடம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதை இராமலிங்க சுவாமிகள் எடுத்துக் காட்டியிருப்பதற்கு இந்நிகழ்ச்சியைச் சான்றாகக் கொள்ளலாம்.

சைவ சமயத்தை வளர்த்து முத்தியடைந்தார். விபூதி, ருத்திராட்சம், சடைமுடி ஆகிய மூன்றையும் சாதனமாகக் கொண்டு அரசாண்டதால், ''மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்'' என்று சுந்தரமூர்த்திகளால் போற்றப்பட்டார். ஆடிக் கார்த்திகை நாள் இவருடைய திருநட்சத்திர தினமாகும்.

மூர்த்திநாயனார் தமது முழங்கையை வைத்துத் தேய்த்த வட்டந்திகழ் பாறை, அம்மன் கோயில் சுற்றில் வடகிழக்கு மூலையில் புதிதாய் அமைக்கப்பட்டுள்ள வாயிலுக்கு அடுத்துள்ள மண்டபத்தில் இருப்பதைக் காணலாம்.

''மம்மர்சேர் சமணர்க்காய்ந்து வைதிக
நெறிவிளக்கி
வெம்மைசேர் தெவ்வைமாதர் விருப்பை
ஐம்புலனைவென்று
செம்மையின் ஊழி வாழ்ந்து சிவனுலகத்
தடைந்த
மும்மையா லுலகையாண்ட மூர்த்தியை
வாழ்த்தல்செய்வாம்''

-பழைய திருவிளையாடல்

''மதுரைவணிகக் குலத்தின் மன்னுமெழில்
மூர்த்தி
மதியில் சமணரசு மாழ்க-இந்துவணிந்த
அம்மாற்குச் சந்தங் கரிதாய் முன்கை
யரைத்து
மும்மையுல காண்டுற்றார் முன்பு''

-பெரியபுராணசாரவெண்பா

''அவந்திரிகுண் டமணாவதின் மாள்வன்
என்றன்றாலவாய்ச்
சிவன்திரு மேனிக்குச் செஞ்சந்தனமாச்
செழுமுழங்கை
உவந்தொளிர் பாறையில் தேய்த்துவ
காண்ட ஒண்மூர்த்திதன்னூர்
நிவந்தபொன் மாடமதுராபுரி என்னும்
நீள்பதியே''

-நம்பியாண்டார் நம்பி

## 4 திருஞானசம்பந்தரும், அனல்புனல் வாதங்களும்

பாண்டி நாட்டில் பாண்டிய மன்னன் சமண சமயத்தை மேற்கொண்டதால் நாட்டில் சமண சமயம் மேலோங்கிப் பல இடங்களிலும் சமணர் பாழிகளும் பள்ளிகளும் மிகுந்து விளங்கின. ஆனால் பாண்டிமாதேவியாகிய மங்கையர்க்கரசியாரும், அமைச்சராகிய குலச்சிறையாரும் சைவ சமய நெறியிற் சென்று, நாட்

டிற்கு ஏற்பட்ட தீங்கை எண்ணி வருந்துவாரா யினர். பாண்டிமாதேவியார், ஞானசம்பந்த ரிடம் மிக்க அன்புடையவர். அவர் சரிதையை கேட்டவுடன் பால் சுரக்கும் பான்மையர். ''நின் நிலை விளம்பக் கொங்கை சுரந்த அருட்கோ மகள்'' என்று போற்றப் பட்டவர்.

அப்போது திருஞானசம்பந்தரும் திரு நாவுக்கரசரும் திருமறைக் காட்டுக்கு எழுந் தருளி வேதங்களால் திருக்காப்புச் செய்துமூடப் பட்டிருந்த திருக்கதவை இருவரும் பதிகம்பாடி திறக்கவும் மூடவும் செய்து அவ்விடத்தில் தங்கியிருந்தார்கள். இதைப் பாண்டிமாதேவி யாரும் அமைச்சரும் கேள்வி யுற்றுத் தமது பரிசனங்களை அழைத்துக் காழிவேந்தரிடம் சென்று நாட்டின் நிலையை அறிவித்துவரும்படி அனுப்பி வைத்தனர். அவர்கள் அவ்வாறே மறைக்காட்டுக்குச் சென்று ஞானசம்பந்தரைக் கண்டு வணங்கிப் பாண்டிநாடு சமண சமயத்தில் ஆழ்ந்திருப்பதையும், தேவியாரும் அமைச்ச ரும் தங்களை அனுப்பியதையும் கூறினார்கள். திருஞானசம்பந்தரும் அவைகளைக் கேட்டுப் பாண்டி நாட்டிற்குப் புறப்பட எண்ணங்கொண் டார்.

திருஞானசம்பந்தர் பல தலங்களை வணங் கிப் பதிகங்கள் பாடித் தொண்டர்களுடன் மதுரை எல்லையை அடைந்தார். தேவியாரின் திருவுள்ளப்படி குலச்சிறையார் காழிவேந்த ரைக் கண்டு வணங்கிப் போற்றி அவரை எதிர் கொண்டு அழைக்கும்படி தேவியார் தம்மை அனுப்பியதையும் கூறினார்.

''சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும்
இனியெதிர் காலத்தின் சிறப்பும்
இன்றெழுந் தருளப்பெற்ற பேறிதனால்
எற்றைக்குந் திருவரு ளுடையேம்
நன்றியில் நெறியில் அழுந்தியநாடும்
நற்றமிழ் வேந்தனும் உய்ந்து
வென்றிகொள் திருநீற்றொளியினில்
விளங்கும்
மேன்மையும் படைத்தனம் என்பார்''

—பெரியபுராணம்.

திருஞானசம்பந்தர் திருவாலவாய்ப் பதி யை நோக்கிப்பதிகம் பாடத் தொடங்கிப் பதி கத்தில் மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் இருவரின் தொண்டுகளையும் சிறப்பித்துப் பாடினார். பிறகு கோயிலுக்குச் சென்று வலம் வந்து வணங்கினார். அப்போது பாண்டிமா தேவியாரும் காழிவேந்தரை வணங்கினார். காழிவேந்தர் அவருக்கு அருள் செய்து தொண் டர்களுடன் ஓர் திருமடத்தில் அமர்ந்தருளினார். இதையறிந்த சமணர்கள் அவர் தங்கியிருந்த மடத்திற்குத் தீ வைத்தனர். அரசனது கொடுங் கோலே இதன் காரணம் என்றறிந்து சம்பந்தர் ''செய்யனே'' என்று தொடங்கும் பதிகம் பாடி

### குருடர்கள் யார்?

சிவன்தன் திருவுருவைக் காணாத
கண்ணே குருடாம். சீர்கால்
சிவன்தன் திருவுருவை எண்ணாத
சிந்தையே பித்தாம். என்றும்
சிவன்தன் திருப்புகழைக் கேளாச்
செவியே செவிடாம், அன்பிற்
சிவன்தன் திருப்புகழை ஓதாத
வாயே திணிந்த மூங்கை.

-காஞ்சிப்புராணம்.

னார். சமணர் வைத்த வெந்தழல் வெப்பு நோயாகப் பாண்டியனைப் பற்றிக் கொண்டது. சமணர்கள் வெப்பு நோயைப் போக்க முயன்றும் பயனில்லாமல் போயிற்று.

பின்பு தேவியார் அறிவித்தபடி பாண்டி யன் ஞானசம்பந்தரை அழைக்க, அவர் ''மந் திரமாவது நீறு'' என்னும் திருப்பதிகம்பாடி வெப்பு நோயைத் தணித்தார். வலப்புறத்தில் குளிர்ந்து இடப்பக்கம் மிகுந்தது. காழிவேந்தர் பாண்டியன் வேண்டுகோளின்படி இடப்புறத்து வெப்பையும் நீக்கினார். இது சுரவாதமாகும்.

பின்பு சமணர்கள் தீயிலும் நீரிலும் வாதம் செய்து வெற்றிபெற விரும்பினர். சம்பந்தர் ''போகமார்த்த பூண்முலையாள்'' என்னும் நள்ளாற்றுப் பதிகம் எழுதப்பெற்ற ஏட்டினை எல்லோருங்காணத் தீயில் இட்டார். சிவபெரு மானையே மெய்ப்பொருளாகக் கொண்ட அவ்வேடு தீயில் வேகாமல் பச்சையாய் விளங் கிற்று. சமணர்கள் தங்கள் சமய உண்மைப் பொருளை ஏட்டில் எழுதித் தீயில் இட்டனர். தீயில் பஞ்சு பட்டழிவதுபோல எரிந்து போயிற்று. அனல்வாதத்திலும் சமணர் தோற்றனர்.

மூன்றாவதாகப் புனல் வாதத்தில் சமணர் கள் ''அத்தி நாத்தி'' என்று எழுதப்பட்ட ஏட்டை வைகை நதியில் இட்டனர். அதனை ஆற்றுநீர் அடித்துக்கொண்டு கடலை நோக்கிச் சென்றது. ஞானசம்பந்தர் ''வாழ்க அந்தணர்'' என்னும் பதிகம் எழுதப்பெற்ற ஏட்டை வைகையில் விட்டார். பிறவியாற்றில் மாத வர் மனம் எதிர்த்துச் செல்வது போல் அவ் வேடு ஆற்றை எதிர்த்துச் சென்று ஓரிடத்தில் தங்கியது. ஏடுகிடைத்த இடம் திருஏடகமாகும். இப்பதிகத்தில் வேந்தனும் ஓங்குக என்றதால் பாண்டியனுடைய கூனும் நிமிர்ந்தது. முன்னர் கூன் இருந்ததால் கூன்பாண்டியன் என்றும் கூன் நிமிர்ந்ததால் நெடுமாறன் என்றும் பெயர் கள் பாண்டியனுக்கு வழங்கின.

திருஞானசம்பந்தர் மூன்று வாதங்களிலும் வெற்றி பெற்றதால் வாது செய்த வாரணம் என்ற பெயரும் வழங்கும். சமணர்களும் தாங்கள் கூறியபடி கழுவேறினர். அரசனும் சைவனானான். நாட்டில் சைவ சமயம் தழைத்தோங்கியது. மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும், நின்றசீர் நெடுமாறனும், 63 நாயன்மார்கள் வரிசையில் சேரும்படியான பேற்றைப்பெற்றார்கள்.

திருஞானசம்பந்தர் திருவாலவாய்ப் பெருமானைப்போற்றிப் பாண்டி நாட்டுத் தலங்களை வணங்கிச் சோழநாடு சென்றார்.

## 5 திருவாதவூரர்

தமிழளிக்கும் தண் பாண்டி நாட்டில், வைகை நதிக்கரையிலுள்ள திருவாதவூரில் அமாத்தியர் குலத்தில் திருவாதவூரர் தோன்றினார். இளமையில் எல்லாக்கலைகளையும் கற்று விளங்குங்கால், அரிமர்த்தன பாண்டியன் இவரது பெருமையைக் கேள்வியுற்று இவரை முதல் மந்திரியாக்கித் தென்னவன் பிரமராயன் என்ற பட்டத்தையும் அளித்தான். மந்திரித் தன்மை பெற்ற வாதவூரர் சிவஞானம் தர வல்ல நல்லாசிரியனை எதிர்பார்த்து வந்தார்.

கீழ்க்கடற்கரையில் நல்ல குதிரைகள் விற்பனைக்கு வந்திருப்பதை அறிந்த அரசன் மிகுந்த பொருளை வாதவூரரிடம் கொடுத்துக் குதிரைகள் வாங்கிவரும்படி அனுப்பினான். வாதவூரர் திருப்பெருந்துறையை அடைந்தார். அங்கு சிவபெருமான் வாதவூரருக்கு ஞானோபதேசம் செய்ய உளங்கொண்டு சிவயோகியராகப் பல சீடர்களுடன் குருந்த மரத்தடியில் வீற்றிருந்தார். இக்காட்சியைக் கண்ட வாதவூரர் குருமூர்த்தியின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி தம்மை ஆட்கொள்ள வேண்டினார். சிவபெருமான் ஞானக்கண்ணால் அவருடைய மும்மலங்களையும் போக்கித் திருவடியைச் சூட்டி ஐந்தெழுத்தை உபதேசித்தார்.

வாதவூரர் மெய்ஞ்ஞான வடிவினராய் தேனும் பாலும், அமுதமுமாய்த் தித்தித்து அகத்தில் தோன்றிய அருள் ஒளியை உணர்ந்து பரம்பொருளைத் துதிக்கலாயினர். பழுதில்லாத சொற்களை வரிசைப்படுத்தி அன்புவடத்தில் முறையாகக்கோத்த பாமாலையை அழுதுசாத்தும் அன்பருக்கு மாணிக்கவாசகன் என்ற பெயரைக் கொடுத்தார்.

''பழுதிலாத சொல்மணியினைப் பக்தி
செய்தன்பு
முழுதுமாகிய வடத்தினால் முறைதொடுத்
தலங்கல்,
அழுதுசாத்து மெய்யன்பருக்கு அக
மகிழ்ந்தையர்
வழுவிலாதபேர் மாணிக்க வாசகன்
என்றார்''

—பரஞ்சோதியார்

மாணிக்கவாசகர் தம்முடன் வந்த பரிசனங்களை அனுப்பிவிட்டு, குதிரை வாங்கக் கொண்டுவந்த பொருளைக் கோயில் திருப்பணிக்கும், பூசனைக்கும், திருவிழாக்களுக்கும் செலவு செய்து திருப்பெருந்துறையில் தங்கியிருந்தார்.

இவைகளை அறிந்த பாண்டியன் உடனே புறப்பட்டு வரும்படி திருமுகம் அனுப்பினான். மாணிக்கவாசகர் இறைவனை வேண்ட, இறைவன் ''ஆவணிமூலத்தில் குதிரைகள் வரும். முன்னே செல்க'' என்று கட்டளையிட்டார். பெருமான் ஓர் மாணிக்கத்தையும் கொடுத்தார் என்று வாதவூர்ப் புராணம் கூறும். மாணிக்கவாசகர் அரசனிடம் சென்று ஆவணிமூலத்தில் குதிரைகள் வருவதைப் பற்றிக் கூறினார். குறித்த காலத்தில் குதிரைகள் வராமையைக் கண்டு பாண்டியன் மாணிக்கவாசகரைத் துன்புறுத்தினான். பெருமான் நரிகளைக் குதிரைகளாக்கித் தாம் குதிரைச் சேவகனாக அவைகளை நடத்திக்கொண்டு பாண்டியனிடம் விடுத்துச் சென்றார். அன்றிரவே அவை மீண்டும் நரிகளாயின.

பாண்டியன் மீண்டும் மாணிக்கவாசகரைத் தண்டலாளர்களைக் கொண்டு தண்டிக்கச் செய்தான். அவர்கள் கடும் வெயிலில் நிறுத்தியும், அவரைப் பலவாறு புடைத்தும் துன்புறுத்தினார்கள். இறைவன் கருணையால் வைகையில் பெருவெள்ளம் வந்து கரைகளை உடைத்து நகருக்குள் புகுந்தது.

அரசன் மந்திரிகளை அழைத்து வைகையின் வெள்ளத்தை ஆங்காங்குள்ள குடிகளைக் கொண்டு கரைகளை அடைக்கும்படி கட்டளையிட்டான்.

எல்லா உடைப்புக்களும் அடைப்பட்டன. வந்தி என்பவளின் கரைமட்டும் அடைபடவில்லை. சோமசுந்தரப் பெருமானே அவளுக்கு வேலையாளாக வந்து பிட்டை யுண்டு வேலை செய்யாமல் இருந்தார். வந்தியின் வேலையாள் வேலை செய்யாமலிருப்பதை அரசன் கண்டு வேலையாளின் முதுகில் பொற்பிரம்பால் அடிக்கவே, எல்லா உயிர்கள் மேலும் அடிபட்டது. எங்கும் நிறைந்த பெருமான் கூடை மண்ணை உடைப்பில் கொட்டி மறைந்தருளினார். பெருமான் அரசனுக்கு மாணிக்கவாசகரின் பெருமைகளையும், அவருக்காகச் செய்த திருவிளையாடல்களையும் அசரீரியாகக் கூறினார்.

## நாத்திகர்களைத் தண்டிப்பதில்லை ஏன்?

அடியவர்கள், தவறு செய்ய முற்படும்போது, அத்தவறுக்கான தண்டனையை உடனே இறைவன் கொடுத்துவிடுகிறார். தன்னை வணங்காத கொடியவர்கள் அடுத்தடுத்துத் தவறுகள் செய்தாலும், அவர் தண்டிக்காமல் வேடிக்கை பார்க்கிறார். இவ்வாறான இறைவனுடைய செயலுக்கு என்ன காரணம் இருக்க முடியும் என்பதை விளக்கியிருக்கிறார் குமரகுருபர சுவாமிகள். தந்தை, தன் அன்பிற்குரிய மகன் தவறு செய்தால், அவனுடைய நன்மையில் அக்கறை இருப்பதால், அவ்வாறு செய்யாதே என உடனுக்குடன் அறிவுறுத்துவதைப் போலவே, ஆண்டவனும் அடியார்கள் செய்யும் தவற்றிற்கு உடன் தண்டனை வழங்கித் திருத்துகிறார். அடியார்கள் அல்லாத மற்றவர்கள் செய்யும் தவற்றிற்கு ஆண்டவன் உடனே தண்டனை தராமல் இருப்பதற்குக் காரணம், அவர்கள் தண்டித்தாலும் திருந்தப் போவதில்லை; மறு பிறவிகளில் ஒருசேர தண்டித்து விடுவோம் என்பதாக எண்ணியே இறைவர், தீயவர் செய்யும் தவறுகளை வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறாராம்.

''தெய்வம் உளதென்பார் தீய செயப்புகின்
தெய்வமே கண்நின்று நின்றொறுக்கும்---
தெய்வம்
இலதென்பார்க் கில்லைத் தம்இன்புதல்
வர்க்கன்றே
பலகாலும் சொல்வார் பயன்''

என்பது குமரகுருபரர் திருவாக்கு!

---

பாண்டியன் மாணிக்கவாசகரை வணங்கித் தன்னை மன்னிக்க வேண்டினான். மாணிக்கவாசகர் அரசனுக்குப் பல நல்லுரைகளைக் கூறி விடைபெற்றுப் பல தலங்களை வணங்கிச் சிதம்பரம் சென்று தில்லைத் திருக்கூத்தனை வணங்கி ஓரிடத்தில் வசித்து வந்தார்.

சிவனடியார்களில் ஒருசிலர் செயற்கரிய செயல்களைச் செய்து தொண்டர்களாயினர். ஆனால் மாணிக்கவாசகரின் பொருட்டுப் பெருமான் சில திருவிளையாடல்களைச் செய்து காட்டித் தொண்டராக்கிக் கொண்டார்.

வலம்புரி கிடக்கும் வாதவூ ரன்ப
பாடும் பணிநீ கூடும் பொருட்டு
மதுரை மாநகரிற் குதிரை மாறியும்
விண்புகழ் முடிமிசை மண்பொறை
சுமந்தும்
நீற்றெழில் மேனியில் மாற்றடி பட்டும்
நின்னைத் தொண்டன் என்னக்
கொண்டனன்''.

—நால்வர் நான்மணிமாலை.

### 6 குமர குருபரர்

பாண்டி நாட்டில் தாமிரபரணி நதியின் வடகரையில், ஸ்ரீவைகுண்டத்துக்கு வடபுறத்தில் உள்ள கைலாசபுரத்தில், சைவவேளாளர் குலத்தில் சண்முக சிகாமணிக் கவிராயருக்கும் சிவகாமசுந்தரியம்மையாருக்கும் புதல்வராகக் குமரகுருபரர் பிறந்தார். ஐந்தாண்டு வரையில் ஊமையாயிருந்து திருச்செந்தூர்ப் பெருமானருளால் பேசும் ஆற்றல் பெற்றுக் கந்தர் கலிவெண்பா பாடினார். தமிழ் இலக்கியங்களையும், ஞானசாத்திரங்களையும் கற்றார். பல தலங்களையும் தரிசிக்க விரும்பி மதுரையில் தங்கி மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் பாடி திருமலை நாயக்கர் முன்னிலையில் அறுகாற் பீடமண்டபத்தில் அரங்கேற்றினார். அப்போது

அம்மையே குழந்தைவடிவமாக வந்து ஓர்முத்துமாலையை இவருக்கு அணிந்து மறைந்ததாகக் கூறுவர். மதுரைக் கலம்பகம் என்னும் நூலையும், திருமலை நாயக்கரின் வேண்டுகோளுக்கிணங்கி நீதிநெறி விளக்கம் என்னும் நூலையும் இயற்றினார்.

பின்பு தருமபுரம் சென்று ஆதீனத்தின் 4வது பட்டமாக விளங்கிய ஸ்ரீமாசிலாமணி தேசிகரை ஞானாசிரியராகக் கொண்டார். பிறகு வேலூர், சிதம்பரம், திருவாரூர், முதலிய தலங்களுக்குச் சென்று பல நூல்களை இயற்றினார். காசியில் சிங்கத்தின் மேல் சென்று முகலாய மன்னனைக் கண்டு அவன் உதவியால் கேதார கட்டத்தில் கேதார மந்திரம், கேதாரத் துறை முதலியன அமைத்தார். மீண்டும் தருமபுரம் வந்து ஞானாசிரியரைத் தரிசித்துக் காசிக்குச் சென்று வைகாசி-கிருஷ்ணபட்சத் திருதியையில் இறைவன் திருவடி அடைந்தார். இவரே திருப்பனந்தாள் ஆதீனம் காசி மடத்தின் முதல்வராவர். இவர் இயற்றிய பிற நூல்கள் முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ், சிதம்பரம் மும்மணிக்கோவை, திருவாரூர் நான்மணிமாலை காசிக் கலம்பகம் முதலியன. இவர் காலம் 17ம் நூற்றாண்டு. மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழின் இரு பாடல்கள் அம்மன் கோயில் அறுகால் பீட மண்டபத்தில் சலவைக் கல்லில் பொறிக்கப்பெற்றுள்ளன.

— — —

# கூத்தபெருமான் திருவடி

—டி. எஸ். சிட்டிபாபு பி.ஏ. (ஹானர்ஸ்)
சென்னை



திருமுறைகள் பன்னிரண்டில் ஈறாய் உள்ளது சேக்கிழார் இயற்றி அருளியுள்ள திருத்தொண்டர் புராணம். அடியவர்களின் வேடத்தையும் ஆலயங்களையும் அரன் எனவே கருதி தொழுதவரது வரலாற்றையே கூறுவது பன்னிரெண்டாம் திருமுறை. இதைத் திருத்தொண்டர் புராணம் என்று கூறாமல் பெரிய புரா்ணம் என்று கூறுவதால் இதன் பெருமை நன்கு விளங்கும்.

தொண்டர்களின் பெருமை இறைவனது பெருமையை விட உயர்ந்தது என்பதை ''நீதி வெண்பா'' என்ற நூலில் காணலாம். சூரியனுடைய வெப்பமான கிரணத்தில் நின்றாலும் நிற்கலாம். ஆனால் சூரிய வெப்பத்தைத் தாங்கி நிற்கும் மணலில், வெயிலில் நிற்பது அரிது. அதே போல் இறைவனின் முன் நின்றாலும் நிற்கலாம். ஆனால் இறைவனின் திருவருளைப் பெற்ற தொண்டர்கள் முன் நிற்பது இயலாத காரியம். அப்படிப்பட்ட தொண்டர்களின் பெருமையை எடுத்துக் கூறுவது யாவர்க்கும் எளிதன்று; சேக்கிழார் போன்ற ஆன்றோர்களால்தான் திருத்தொண்டர் புராணத்தைச் செவ்வனே எடுத்துரைக்க முடியும்.

சேக்கிழார் அநபாய சோழனுக்கு அமைச்சராயிருந்தார். அநபாய சோழன் சைவ நெறியை ஆதரிக்காமல் சமண சமய நூல்களான சீவகசிந்தாமணி, மணிமேகலை, முதலியவைகளில் கவனம் செலுத்தி வந்தான். இதைக் கண்ணுற்ற சேக்கிழார் பெரிதும் மனம் நொந்து அரசன் என்று சைவ சமயத்தில் ஈடுபடப் போகிறானோ? என்று ஏங்கினார். அதற்கேற்ப அரசன் மனம் மாறி, சேக்கிழார் பெருமானைத் திருத் தொண்டர்களின் வரலாற்றை விரிவாக பாடித்தரும்படி கேட்டுக் கொண்டான். சேக்கிழார் அப்படிப் பாடித் தந்தால், அரசனுக்கு மட்டுமன்றி, அது உலகிற்கும் பேருபகாரமாயிருக்கும் என்று மன்னன் கருதினான். அடியார்களது பெருமையை எடுத்துரைக்கும் ஆற்றல் தனக்கு உண்டோ என்று தயங்கினார் சேக்கிழார். அப்படி அடியார்களது பெருமையைப் பாடவேண்டும் என்றால் அடியார்களிடம் பெருமதிப்பு கொண்ட இறைவனே அடியெடுத்துக் கொடுக்க வேண்டும் என்று விரும்பினார்.

சேக்கிழார் அரசனின் வேண்டுகோளுக்கிணங்க தில்லையை நோக்கிப் புறப்பட்டார். தில்லை எல்லை அடைந்ததும் வீழ்ந்து வணங்கினார். சிவகங்கையில் நீராடி நியம நிட்டைகளை முடித்துக் கொண்டு, தில்லை பெருமானை வலம் வந்து கூத்த பெருமான் முன் நின்று ''பெருமானே நான் அடியவர்களுடைய பெருமையைப் பாட வந்துள்ளேன். எனக்குத் தாங்கள்தான் அடியெடுத்துக் கொடுக்க வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்.

அவ்வமயம் ஒரு அற்புதம் நிகழ்ந்தது. கூத்தப் பெருமான் திருவருளாலே ''உலகெலாம்'' என்ற பேரொலி கேட்டது. இதைக் கேட்ட தில்லை மூவாயிரவர், திருமடத்தலைவர்கள், கோயிலில் திருத்தொண்டு செய்து வந்தவர்கள் ஆகியோர் இறைவனது திருவருளை எண்ணி, தங்கள் கைகளை சிரம் மேல் குவித்து சிற்றம்பலப் பெருமானையும் சேக்கிழாரையும் போற்றினர். தில்லை வாழ் அந்தணர்கள் கூத்த பெருமானின் திருமாலையை திரு

நீற்றுடன் சேக்கிழாருக்கு அளித்து பரிவட்டம் கட்டி அவரை வாழ்த்தினர்.

அம்பலவாணரது அருட் பேறுகளை ஏற்று சமயக் குரவர்களை வணங்கி, ஆயிரக்கால் மண்டபம் அடைந்து விபூதி, ருத்ராக்கம் தரித்து இறைவன் அடியெடுத்துக் கொடுத்த ''உலகெலாம்'' என்ற சொல்லையே கொண்டு முதற் பாடலாய் பாடினார். அம் முதல் பாடல்:

''உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்''

என்பதாகும்.

சேக்கிழார் மேற்கொண்டது மிகப் பெரிய செயல்; அடியவர்களின் பெருமை அளவிடற்கரியது இறைவனே அடியெடுத்துத் தந்துள்ளான். இறைவன் அடியெடுத்துக் கொடுக்க ''உலகெலாம்'' என்ற சீரிய சொல்லையே வைத்து பாட ஆரம்பித்தார். அப்பாடலை மற்ற சொற்களோடு சேர்த்துப் பாடவேண்டும். அப்பாடலுக்கு உரிய பொருளாக கூத்தப்பெருமான் திருவடியையே பொருளாகக் கொண்டு முதற் பாடலை இயற்றினார்.

உலகு என்பது உயிர்களைக் குறிக்கும். உலகம் இருவகைப்படும். அவை, ''சேதனப் பிரபஞ்சம்'' ''அசேதனப் பிரபஞ்சம்'' அவை முறையே அறிவுள்ள உலகம், அறிவற்ற உலகம் என்பன. சேக்கிழார் பெருமான் குறிப்பிடுவது அறிவுள்ள உலகத்தையே யாகும். அறிவுள்ள உலகத்து உயிர்கள் உணர்தற்கும் ஓதற்கும் அரியவன் என்று இறைவன் பெருநிலையை உணர்த்துகிறார் சேக்கிழார் பெருமான்.

இறைவன் வாக்குமனாதீதன்; அவன் உயிர்களின் சொல்லையும் நினைவையும் கடந்தவன், அதனால் அவன் கடவுள் எனப்படுகிறான். ''உணர்வதற்கு அரியவன்'' என்றது ''பசுஞானத்திற்கு'' எட்டாதவன் எனவும் ''ஓதற்கு அரியவன்'' என்றது 'பாசஞானத்திற்கு அப்பாற்பட்டவன்'' எனவும் கூறப்பட்டுள்ளது.

சுத்த மாயாபுவனம், அசுத்த மாயாபுவனம், பிரகிருத மாயாபுவனம் என மூவகைப்பட்ட கோடானகோடி அண்டங்களுடன் விளங்குவதை உணர்த்த ''உலகம்'' என்னாது ''உலகெலாம்'' என்று அடியெடுத்துக் கொடுக்கப்பட்டமையால், அத்துணை உயிர்வகைகளில் ஒருவராலும் உணர்தற்கும் சொல்வதற்கும் அரியவன் இறைவன் என்பதை விளக்கினார். ''உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்'' என்றது, இறைவனது சொரூப நிலையை விளக்குவது. இறைவன் மனோ வாக்குகளுக்கு அகப்படும் வகையில் அருள் உருவங்கள் பல தாங்கி நிற்பதால் ''நில உலாவிய நீர்மலி வேணியன்'' என்றார். இது இறைவனுடைய தடத்த நிலையை உணர்த்தும். தடத்த நிலையில் அளவற்ற ஆற்றல்களைப் பெற்றவனாய் உயிர்களை ஐந்தொழிலில் ஈடுபடச் செய்து உய்விப்பதனால் ,''அலகில் சோதியன் அம்பலத்தாடுவான்'' என்று கூறியுள்ளார்.

மலர்ச் சிலம்படி என்னாது 'மலர் சிலம்படி'' என்று கூறியுள்ளமை எல்லாப் பொருள்களும் அவன் திருவடியினின்று தோன்றுதலை உணர்த்தவே. திருவடியில் சிலம்பைக் கூறியது நாதத்தைக் குறித்தற்கு. வாழ்த்தலும், வணங்கலும் கூறியதனால் நினைத்தல் அவற்றிற்கு முன்பே நிகழவேண்டும். ஆகையால் சேக்கிழார் மன மொழி மெய்களால் இறைவனுக்கு வாழ்த்துக் கூறினார் என்று கொள்ள வேண்டும்.



சேக்கிழார்

''உலகெலாம்'' என்ற இறைவன் வாக்கைப் பெரியபுராணத்தின் முதல் நடுமுடிவு என்றமூவிடங்களிலும் காணலாம்.

இறைவன் அடியெடுத்துக் கொடுக்கவே சுந்தரமூர்த்தி நாயனார் தொகையாகவும், நம்பியாண்டார் நம்பி வகையாகவும், திருத்தொண்டர் புராணத்தைப் பாடினர். இறைவன் ''உலகெலாம்'' என்று அடி யெடுத்துக் கொடுக்க சேக்கிழார் விரிவாகப் பாடினார்; அவர் பாடியது வரலாற்று நூல் மட்டுமல்லாது வணக்க நூலாகவும் அமைந்துள்ளது. ஆகையால் அடியவர்களின் பெருமை உலகிற்கு நன்கு விளங்கும்.

''தோடுடைய செவியன்'' என்று ஓகாரத்தில் தொடங்கிய முதல் திருமுறை ''உலகெலாம்'' என்ற மகர ஒற்றில் பன்னிரண்டாம் திருமுறையில் முடிகின்றது. ஆகையால் திருமுறைகள் அனைத்தும் ஓங்காரத்தின் விரிவு என்பதை நன்கு உணரலாம்.

பன்னிரு திருமுறைகளையும் உலகம் ஓதி இன்ப வெள்ளத்தில் திளைக்க கூத்த பெருமான் திரு வருள் புரிவாராக.

''என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி யுலகெலாம்.''

# பொருந்தா உணவுகள்

**மறைமலையடிகளார்**

கடவுளால் மக்களுக்குக் கொடுக்கப்பட்ட இயற்கை உணவுப் பொருள்கள் மரஞ்செடிகொடிகளின் பயனான இலை பூ காய் கனி விதை கிழங்கு முதலானவைகளேயாம். மக்களேயல்லாமல் அசையும் பொருள்களாகிய எல்லா உயிர்ப் பொருள்களுக்கும் இயற்கை உணவாவன அசையாப் பொருள்களாகிய பயிர் பச்சைகளேயாகும். இதனை எதனால் அறிகின்றோமெனின், அசைந்து திரியும் உயிர்களில் ஒன்று மற்றொன்றைப் பிடித்துத்தின்ன முயலுங்கால் மெலியது தனதுயிரைப் பாதுகாத்துக் கொள்ளும்பொருட்டு மிகவும் விரைந்தோடித்தப்பி பிழைப்பதனை கண்டு அறிகின்றோம். இவ்வாறு அசைந்தோடும் உயிர்களில் மெலியது வலியதற்கு இரையாகாமல் தப்பியோடிப் பிழைத்தற்கு ஏற்ற உடம்பின் அமைப்பை இறைவன் இயங்கும் உயிர்கள் எல்லாவற்றினிடத்தும் அமைத்து வைத்திருக்கின்றான். ஒவ்வொருகால் மெலியது தப்பி ஓட வகையின்றி வலியவுயிரினிடத்து அகப்பட்டுக்கொள்ளும்படி நேர்ந்தால் அப்போதும் அஃது அதனை எதிர்த்துப் போராடுவதற்கு இசைந்த உறுப்புகளையும் அதற்குக் கொடுத்திருக்கின்றான். மான் மரை கடம்பை யாடு மாடு யானை முதலான உயிர்கட்கு வலியகொம்புகளையும், முள்ளம்பன்றி பன்றி முதலியவற்றுக்குக் கூரிய முட்களையும் பற்களையும், முயல் குதிரை முதலியவற்றிற்கு விரைந்த ஓட்டத்தையும், விரைந்தோடமாட்டா நந்து சங்கு யாமை முதலியவற்றிற்கு வலிய ஓடுகளையும், தேள், பாம்பு முதலியவற்றிற்குக் கொடிய நஞ்சையும், நண்டு, கெளிறு, சுறா முதலியவற்றிற்குக் கத்திரிக்கால், சிலாம்பு, வாட்கொம்பு முதலியவற்றையும் தந்திருக்கின்றான். இங்ஙனமே இன்னும் பலவகையான பூச்சிகள் புழுக்கள் மீன்கள் பறவைகள் முதலியனவெல்லாம் தம்மின் வலியவற்றிற்குத்தாம் தப்பிப்பிழைக்க உதவியாகும்படி அவ்வவையிருக்கும் இடங்களின் நிறங்களை அவற்றின் உடம்பிற்குத் தந்து, தமக்குப் பகையான உயிர்களின் கண்களுக்கு அவை எளிதிற் புலனாகாதபடி வைத்திருக்கின்றான். சில பச்சிலைப் புழுக்கள் தாம் உறையும் இலைகளின் நிறத்தைப்போலவே இருத்தலால் அவை அவ்விலைகளில் அசைவற்று இருக்குங்கால் அவற்றை அவ்விலைகளின் வேறாய்க் காண்டல் அரிதாகும். தாந்தாம் இருக்கும் இடத்தின் அல்லது இடத்திலுள்ள பொருள்களின் நிறங்களை அவற்றைச் சார்ந்த உயிர்கள் பெறும்படி இறைவன் வகுத்தது அவற்றை மற்ற வலிய உயிர்களின் கண்களுக்குத் தப்புவித்தற்பொருட்டேயாம் என்பது இதனால் நன்கு விளங்குகின்றதன்றோ? படைப்பின் இயற்கைகளை இங்ஙனங்கருத்தூன்றிப் பார்க்குங்கால், அசைந்து திரியும் ஓர் உயிர் அங்ஙனமே அசைந்து திரியும் மற்றோர் உயிரினைப் பிடித்துக் கொன்று தின்னுதல் இறைவன் திருவுளத்திற்குச் சிறிதும் ஒவ்வாதென்பது தெளியப்படுகின்றதன்றோ?

அவ்வாறானாற், புலி கரடி அரிமா முதலான சில மறவிலங்குகள் மற்ற உயிர்களைக் கொன்று தின்னுமாறு இறைவன் அவற்றிற்குக் கூரியபற்களையும் நகங்களையும் வகுத்தது என்னையெனிற் பன்னூறாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே வலிய பெருவிலங்குகள் பலதொகுதிகளாயிருந்தமையின் அவற்றுள் ஒன்றைபொன்று எதிர்க்கநேர்ந்தக்கால் அவை தம்மைத் தாமே பாதுகாத்துக் கொள்ளுங் கருவிகளாகவே கூர்ப்பற்களையும் நகங்களையும் அவற்றிற்கு அமைத்துக்கொடுத்ததல்லாமல், அவற்றால் மற்றை மெலிய உயிர்களை அவை கொல்வதற்காகவென்று அவற்றைத் தந்திலன். அங்ஙனமாயிற், புலி கரடி முதலான வல்விலங்குகள் மான் மரை முதலான மெல்விலங்குகளைக் கொன்று தின்னலானது எதனாலெனின் வல்விலங்குகளுக்குள்ளேயே ஒன்றை ஒன்று எதிர்த்துக் கடித்துப் பிறியுஞ்சண்டையிடுங்கால், அவை ஒன்றை ஒன்று கடித்து ஊன் சுவை கண்டுகொண்டமையின் அவ்வல்விலங்குகள் தம்மோபொத்த ஏனை வல்விலங்குகளைக் கொன்று அவற்றின் ஊனைச் சுவைத்தல் அரிதாதல் அறிந்து, தாம் எதிர்த்துக்கொல்லுதற்கு எளியவான மெல்விலங்குகளைக்கொன்று அவற்றின் ஊனைத் தின்றுதின்று சுவை கண்டு வரவே, பிறகு அவை எளிய விலங்குகளை கொன்றுதின்னுதலிலேயே பழகி விட்டன. பழைய நாளிற் பன்றியிறைச்சியே தின்றறியாத சீனக்காரர், ஒருகால் ஒரு வீடு நெருப்புப் பற்றி எரிகையில் அதில்

> ''மக்கள் நூறாண்டு உயிர் வாழ்க்கை'' என்ற நூலிலிருந்து இச்சிறந்த கட்டுரை வெளியிடப்படுகிறது. உணவுப் பொருட்களின் பற்றாக் குறை காரணமாகவும், பழக்கத்தின் காரணமாகவும், மக்களில் பெரும்பாலோர் பொருந்தா உணவுகளை உண்டு வருகின்றனர். அவற்றைக் குறைத்துக் கொள்ள வேண்டியதன் அவசியத்தையும், சிறப்பையும் வற்புறுத்தும் இக்கட்டுரை, வாசகர்களின் சிந்தனையைத் தூண்டி நல்வழிப் படுத்தும் விதத்தில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

அகப்பட்டு வெந்து போன பன்றிகளின் இறைச்சியைத் தற்செயலாய் ஒருவர் சுவை பார்க்க நேர்ந்ததிலிருந்து பன்றியிறைச்சி தின்னக் கற்றுக்கொண்டார்கள் என்னும் வரலாறும் இவ்வுண்மையை நன்கு நிலைநாட்டும். இன்னும் சில தீவுகளில் உள்ள காட்டுமிராண்டிகள் ஒருவரோடொருவர் சண்டையிடும்பொழுது ஒருவரையொருவர் கடித்து ஊன்சுவை அறிந்தமையின், அது முதல் தமக்கு எதிரானவர்களைச் சிறைபிடித்துக் கொல்லப்பட்டவர்களைக் கொன்று அவர்களின் ஊனைத்தின்பதில் பழகிவிட்டார்களென்று அறிகின்றோம். மக்களை மக்கள் கொன்று தின்னும் மிகக்கொடிய செயல் அதிற்பழகாத நம்மனோர்க்குப் பெருவியப்பினையும் பேரச்சத்தினையும் தருமேனும், அதிற் பழகி வந்தவர்களுக்கு அஃது எளிதாகவே இன்றும் இருக்கின்றது. இத்தன்மை வாய்ந்த மக்கள் சிலர் இருப்பதுகொண்டு, இக்காட்டுமிராண்டிகள் தம்முள் ஒருவரையொருவர் கொன்று தின்னுமாறு கடவுள் அமைத்தார் எனவும், மக்களுள் ஒருவர் மற்றொருவரைக் கொன்று தின்னுதல் பொருத்தமேயாம் எனவுங் கூறுவார் உண்டோ? காட்டுமிராண்டிகள் தம்முள் ஒருவரையொருவர் கொன்று தின்னக் கற்றுக் கொண்டது போலவுஞ் சீனக்காரர் பன்றியிறைச்சியை தின்னக் கற்றுக் கொண்டது போலவும், புலி கரடி முதலிய வல்விலங்குகளுந்தாம் படைக்கப்பட்ட காலத்தில் ஊன் தின்னாதனவாகவேயிருந்து அதற்கு நெடுங்காலம் பிற்பட்டே அதனைத் தின்னக் கற்றுக் கொர்ண்டனவென்பது துணியப்படும். இவ்வுண்மையை நாட்டுதற்கு ஒரு சிறந்த மேற்கோள், இக்காலத்தில் ஊன் தின்னுதலையே தமதுகொள்கைக்குச் சிறந்ததோர் ஒழுக்கமாகச் சொல்லுங் கிறித்தவ சமயத்தார்க்குரிய வேத நூலிலிருந்தும் எடுத்துக் காட்டுவோம். கிறித்துவர் வேதத்தின் முதல் நூல் முதல் இயலிற் கடவுள் உலகங்களையும் உலகத்தில் உள்ள புற்பூண்டு முதல் மக்கள் ஈறான எல்லா உயிர்ப் பொருள்களையும் படைத்திட்ட பின்னர் மகனை நோக்கி, ''இந்நில உலகம் முழுவதும் உள்ள வித்து ஈனும் ஒவ்வொரு பூண்டினையும், மரம்ஈனும் வித்துள்ள பழங்களொடு கூடிய ஒவ்வொரு மரத்தினையும் நான் உனக்குத் தந்திருக்கின்றேன். அவை நினக்கு உணவாகுக. இனி நிலத்தின்கண் உள்ள ஒவ்வொரு விலங்குக்கும், வானின்கண் உள்ள ஒவ்வொரு பறவைக்கும், நிலத்தின் மேல் நகர்ந்து செல்லும் ஒவ்வொர் உயிர்பொருளுக்கும் உணவாக ஒவ்வொரு பசியபூண்டினையும் நான் கொடுத்திருக்கின்றேன் என்று கூறியருளினார். அவர் சொன்னபடியே ஆயிற்று''. இம்மேற்கோள் கிறித்தவர் வேதபுத்தகத்தின் முதல் நூலிருந்து எடுக்கப்பட்டதாயினும், இதன்கண் காணப்படும் உண்மை, கடவுள் உலகங்களையும் உயிர்களையும் படைத்த படைப்பின் பழைய உண்மை நிலையைத் தெளிவாகக் காட்டுதலால் இஃது எல்லாச் சமயத்தாராலும் பொன்னே போல்போற்றற்பாலதாயிருக்கிறது. எனவே, மக்களும் அசைந்து செல்லும் மற்ற உயிர்களும் முதன்முதல் படைக்கப்பட்ட காலத்து அவையெல்லாம் புற்பூண்டுகளையும் காய் கனி கிழங்கு விதைகளையுமே உணவாகக் கொண்டு வாழ்ந்தனவென்பதும், அவ்வுயிர்களெல்லாவற்றிற்கும் நிலையியற் பொருள்களான பயிர் பச்சைகளையும் அவற்றின் பயன்களையுமே இறைவன் உணவாக வகுத்தருளினனென்பதும் நன்கு உணரப்படும். மேலும் அசைந்து திரியும் உயிர்களுள் ஒன்று மற்றொன்றைக்கொன்று தின்னல் இயற்கைக்கு மாறாயிருப்பதல்லாமலுங் கடவுளின் கட்டளைக்கும் முற்றும் முரணாமென்பதுங் கிறித்தவர்க்குரிய வேத நூலிலும் புலனாகின்றது. சில வல்விலங்குகள் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளும் பொருட்டு இறைவனால் தரப்பட்ட கூரிய நகங்களையும் பற்களையும் தம்மைக்காத்துக் கொள்ளுஞ் செயலில் மட்டும் பயன்படுத்தாமற், பிற ஏழை உயிர்களைக் கொன்று தின்னுவதற்கு பயன்படுத்தினால் அஃது அவ்வவ் விலங்குகளின் குற்றமாகுமேயல்லாமல், இறைவன் வகுத்த இயற்கைக் குற்றமாதல் ஒரு சிறிதுஞ் செல்லாதென்க். இங்ஙனமே இறைவனருளாற் பெற்ற பகுத்தறிவை மக்கள் பலர் தீயவழிகளில் பயன்படுத்துதல் அவர் தங் குற்றமேயாகுமல்லாமல் அஃது இறைவன் வகுத்த இயற்கையால் வந்த குற்றமென்று கூற எவரேனும் ஒருப்படுவரோ. இவ்வுண்மையைச் செவ்வையாய் ஆராய்ந்து பார்க்கப்பார்க்க அசைந்து திரியும் உயிர்களில் ஒன்று மற்றொன்றைக் கொன்று தின்னும் இயற்கையுடையனவாக அவை கடவுளால் முதலில் அமைக்கப்படவில்லையென்பது தெற்றென விளங்காநிற்கும். அசைந்து திரியும் உயிர்கள் ஒவ்வொன்றுந் தம்மைத் தம்மின் வலிய உயிர்களினின்றும் பாதுகாத்துக் கொள்ளுதற்கேற்ற உறுப்புகளின் அமைதியோடு படைக்கப்பட்டிருத்தலால், அவை ஒன்றை ஒன்று இரையாகப் பிடித்துத் தின்னுதல் இறைவன் திருவுள்ளத்திற்குச் சிறிதும் ஒப்பாகாதென்றே கடைப் பிடிக்க.

இனிப்புற்பூண்டு மரஞ் செடிகொடிகள் முதலியனவோ அசைந்து திரியமாட்டாமல் ஒவ்வோர் இடங்களில் நிலையாகநிறுத்தப்பட்டிருத்தலானும், அவற்றின் கண் உள்ள இலை பூ காய் கனி விதை முதலியவற்றை அசைந்து திரியும் மற்றை உயிர்கள் பறித்துத்தின்ன வரும்போது அவற்றொடு அவை சண்டையிடக்காணாமையானும் இயங்கும் உயிர்கள் அத்தனைக்கும் உணவாகக் கடவுளால் தரப்பட்டவை பயிர்பச்சைகளேயாமென்பது இனிது புலப்படவில்லையா? அஃது உண்மையேயென்றாலும், பயிர் பச்சைகளும் உயிருள்ள பொருள்களேயாகையால் அவற்றை உணவுக்காக அறுத்தலும் பறித்தலும் பிடுங்கலுங் குற்றமல்லவோவெனிற் குற்றமல்ல. மரஞ்செடி கொடிகளின் பயன்களை அவற்றினின்றும் அகற்றும் போது அவை மற்றை இயங்கும் உயிர்களைப் போன்று துடிதுடித்துக் கத்தித்துன்புறக் காணாமையானும், இயங்கும் உயிர்களின் உடம்பினின்று நகம் மயிர் முதலியன களையப்படும்போது அவை துன்புறாமைபோலப் பயிர் பச்சைகளும் தம்மினின்று நீக்கப்படும் பயன்களாற் றாம் சிறிதுந்துன்புறமாட்டா என்பது உணரப்படுதலாலும், இயங்கும் உயிர்களிற் காணப்படும் சிவந்த இரத்தம் புலால் நாற்றம் மலநீர்க் கழிவுகள் புற்பூண்டுகளிற் காணப்படாமையாலும், இயங்கும் உயிர்கள் தம்மை ஒன்று துன்புறுத்த வந்தக்கால் அதற்குத் தப்பியோட முயலுதல் போலப் பயிர் பச்சைகள் முயலக்காணாமையாலும், மரஞ்செடி கொடிகளை அவ்வாறு பயன்படுத்திக் கொள்வது குற்றமாகாது. மேலும் ஊன்உணவின்றி, இயங்கும் உயிர் எல்லாம் வாழ்தல் கூடும். ஆனால். புற் பூண்டுகளும் அவற்றின் பயனும் இன்றி மற்றை எந்த உயிரும் உயிர் வாழல் கூடுமோ? ஊன் தின்னும் உயிர்களுங்கூட அவ்வூனையே முழுதும் உணவாய்க்கொள்ளாமல், இவை பூ காய் கனி கிழங்கு வித்துக்களையும் உணவாய்க்கொண்டல்லவோ பிழைக்கின்றன. இன்னும் ஊன் சிறிதுந் தின்னாத ஆடு மாடு குதிரை யானைமான் கிளி குரங்கு முதலான உயிர்களை நாம் பார்த்தல் போலப் பயிர் பச்சைகளைச் சிறிதுந்தின்னாத எந்த உயிரையேனும் நாம் காணுதல் கூடுமோ! ஊனையே மிகுதியாய்த் தின்று உயிர் பிழைக்கும் புலி கரடி அரிமா ஓநாய்களுங் கூட இடையிடையே பல வகைப் பச்சிலைகள் விதைகள் கிழங்குகள் முதலியவற்றைத் தின்னல் அல்லாமலும், ஊன் உணவு முற்றும் அகப்படாத காலங்களிற் புற்பூண்டுகளின் பயன்களையே முழுதுந் தின்று உயிர்

## பங்குனி உத்திரம்

உத்திரத் திருநாளில் உம்திருவடி காண
எத்தனை தடைவரினும் வந்திடுவோம்
சித்திரைத் திருத்திங்கள் தோன்றிடும் முழுநிலவாம்
உம்எழில் முகம்கண்டு மகிழ்ந்திடுவோம். (உத்திரத்)

சண்முக நதியோடு சரவணக் குளம் ஆடி
சந்நிதிப் படியேறி நடந்திடுவோம்
பன்னிரு கரம்கொண்ட மன்னவன் உனைப்போற்றும்
பண்களும் பலபாடிப் புகழ்ந்திடுவோம் (உத்திரத்)

பாலுடன் தயிரூற்றிப் பன்னீரும் பஞ்சாமிர்தம்
அபிசேக ஆராதனை செய்திடுவோம்
பாலன்நீ வேடன் வேந்தன் ஆண்டியெனக்
கோலம் பலகொள்ளக் குளிர்ந்திடுவோம் (உத்திரத்)

மேக முகில்முட்ட நீளும் பழநிமலை
தேகம் உள்ளமட்டும் கண்டிடுவோம்
பாகம் உமைகொண்ட பரமன் சிவன்பெற்ற
முருகா எமைஎன்றும் காத்திடுவாய் (உத்திரத்)



பிழைத்து வருகின்றன. இம் முறையால் நோக்குமிடத்தும் இயங்கும் உயிர்கள் எல்லாவற்றிற்கும் இயற்கை யுணவாவன புற் பூண்டுகளும் அவற்றின் பயன்களுமே யாமென்பது நன்கு பெறப்படும்.

இனி, நிலையியற் பொருள்களாகிய புற்பூண்டுகள் இன்றி இயங்கியல் பொருள்கள் ஒரு சிறிதும் உயிர் வாழமாட்டாவென்பது மற்றொரு வகையாலுங்காட்டுவாம். ஈ எறும்பு புழு முதல் மக்கள் ஈறாக இயங்கும் உயிர்கள் எல்லாம் பிராண வாயு வென்னுந் தூய உயிர் வளிய்ய மூச்சினுள்ளிழுத்தே உயிரோடு உலாவுகின்றன. இவ்வுயிர் வளியை உட்கொள்ளாமல் மக்களும் மற்றை இயங்கும் உயிர்களும் ஒரு சிறிதும் உயிரோடிருத்தல் முடியாது. இவ்வளவு சிறந்த உயிர் வளிமட்டும் புறத்தே எங்கும் நிறைந்திருக்குமாயின் இயங்கும் உயிர்கள் ஒரு காற் புற்பூண்டுகளின் உதவியை வேண்டாமலே உயிரோடிருக்கலாம். ஆனால், அவ்வுயிர் வளியோடு கூட நச்சுக் காற்றும் ஊடேஊடே ஓயாமல் வந்து நிரம்புகின்றது. யாங்ஙனமெனிற் காட்டுவாம். இயங்கும் உயிர்களின் உடம்பிலுள்ள தசை அவ்வளவுங் கரியேயாகும்; இதனை அறிய வேண்டின் ஒரு சிறிய ஊன் துண்டத்தை நெருப்பில் இடுக. அதிலுள்ள பசை வறண்டவுடன் அது கரியாவதைக் காணலாம். இங்ஙனம்கரியால் ஆன ஊன், உயிர் உள்ள உடம்புகளில் ஒவ்வொரு நொடியும் புதிது புதிதாக ஆக்கப்பட்டு வருதலின் அவ் ஊனின் பழைய பகுதிகளும் அவ் ஒவ்வொரு நொடியுங் கழிக்கப்பட்டுக் கொண்டே வரும். அவ்வாறு கழிக்கப்பட்ட ஊன்பகுதிகளாலான கரி உள்ளிழுக்கப்படும் உயிர்வளியோடு கலந்து நச்சுக் காற்றாகப் புறத்தே மூச்சின் வழியாய் வெளிப்படுத்தப் படுகின்றது. இங்ஙனமே ஒவ்வோர் இயங்கும் உயிரின் உடம்பினின்றும் ஒவ்வொரு நொடியும் வெளிப்படுத்தப்படும் நச்சுக் காற்று இடைவெளி எங்கும் வந்து நிரம்புவதால், மீண்டும் அதனையே உள்ளிழுக்க நேருமாயின் இயங்கும் உயிர்கள் அத்துணையும் இரத்தம் நஞ்சாகி இறந்துபோம். ஆனால், அவை அங்ஙனம் இறவாமைப் பொருட்டுப்பேர் இரக்கம் உடையனவாகிய இறைவன் மரஞ்செடி கொடிகளை அமைத்து வைத்திருக்கின்றான். எவ்வாறெனின் மக்களாகிய நாமும் இயங்கும் உயிர்களும் வெளிவிடும் நச்சுக்காற்றை இம் மரஞ்செடி கொடிகள் உள் இழுத்துப் பிறகு தூய உயிர்வளியை வெளிவிடுகின்றன. நமது உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படுவது உயிர் வளி. பயிர்பச்சைகளின் உயிர் வாழ்க்கைக்கு முதன்மையாய் வேண்டப்படுவது நச்சுக்காற்றாகிய கரி வளி. நாம் வெளிவிடுவது கரிவளி, பயிர் பச்சைகள் வெளிவிடுவது உயிர்வளி. நாம் வெளிவிடுங் கரிவளி பயிர் பச்சைகளின் உயிர் வாழ்க்கைக்கு உரிதாய்ப் பயன்படவும், பயிர் பச்சைகள் வெளிவிடும் உயிர் வளி நமதுயிர் வாழ்க்கைக்கு ஏற்றதாய்ப் பயன்படவும் வகுத்த இறைவனது பேரருட் செயலை ஆராய்ந்து பார்க்குங்கால் இயங்கும் உயிர்கட்கு உதவியான புற்பூண்டுகளும், ஒரு நிலையிலுள்ள புற்பூண்டுகட்கு உதவியாவன இயங்கும் உயிர்களுமேயாம் என்பது புலப்படவில்லையா? பயிர் பச்சைகளிலிருந்து அவற்றின் பயனை நாம் எடுத்து உட்கொண்டு உயிர் வாழுதல் போல, நாம் வெளியே கழித்துவிடுங் கரிவளியை உட்கொண்டு, பயிர்பச்சைகள் உயிர் வாழுகின்றன. இவ்வாறாக இயங்கும் உயிர்களின் வாழ்க்கைக்கு நிலையியற்பொருள்களும், நிலையியற்பொருள்களின் உயிர்வாழ்க்கைக்கு இயங்

கியற்பொருள்களும் இன்றியமையாதனவாய் இருத்தலால், மக்களும் பிற இயங்கும் உயிர்களும் புற்பூண்டுகளையும் அவற்றின் பயன்களையும் உண்டு உயிர்வாழ்தலே பொருத்தம் உடைத்தாம். இதுவே இவற்றை இங்ஙனம் வகுத்து அமைத்த இறைவன் திருவுளத்திற்கும் ஒப்பதாகும்.

இவ்வாறன்றி இயங்கும் உயிரில் ஒன்று மற்றொன்றினைக் கொன்று தின்னுதல் இயற்கைக்கும் இறைவன் திருவுளச் செயலுக்கும் முற்றும் மாறாய் இருத்தலால், ஊன் தின்னும் உயிர்கள் அவ்வூன் உணவினாலேயே பலவகை நோய்களை அடைந்து பெரிதுந் துன்புற்று இறக்கின்றன. ஊன் உடம்புகள் இயற்கையிலேயே அருவருக்கத்தக்க அழுக்குகளும் நச்சு நீரும் உடையனவாகும். எவ்வளவு மணமுஞ் சுவையும் தூய்மையும் உடைய திண்பண்டங்களேயாயினும் அவை நமது உடம்பின் உட்சென்ற அளவானே, அம்மணமுஞ்சுவையுந் தூய்மையுங்கெட்டு தீ நாற்றமும் அருவருப்பும் உடைய மலநீர்களாய்க்கழிக்கப்படுகின்றன. இந்த இயல்பை உற்று நோக்குமிடத்து, ஊன் தின்னும் மக்கள் பூனை நாய், புலி கரடி சிங்கம் முதலிய உயிர்களின் உடம்புகளைவிட, ஊனே தின்னாத மாடு குதிரை மான் மரை யானை முதலிய உயிர்களின் உடம்புகள் மிகச்சிறந்தனவாகவும் தூயனவாகவும் இருத்தலைக் காண்கின்றோம்; ஏனென்றால், யாடு மாடு குதிரை முதலியவற்றின் சாணங்கள் தீ நாற்றமும் அருவருக்கத்தக்க இயல்பும் இல்லாதனவாயிருக்கின்றன. ஊன் தின்னும் உயிர்களின் உடம்புகளைக்காட்டிலும் ஊன் தின்னாதனவற்றின் உடம்புகள் தூயனவாயிருத்தலை ஆராய்ந்தால், அவை அங்ஙனம் அருவருக்கத்தக்க தன்மையை அடைந்தது ஊன்தின்றதனாலேயே என்பது புலனாகும். அப்படியானால், ஊன்தின்னாத யாடு மாடு முதலியவற்றின் உடம்புகள் தூயனவாயிருத்தலின் அவற்றின் ஊனைத் தின்னுதல் பொருத்தமாகுமன்றோவெனின் ஊன் தின்னும் உயிர்களின் உடம்பைவிட அவற்றின் உடம்பு தூயனவென்று கொள்ளப்படுமேயல்லாமல், ஊன் என்ற பொது வகையால் நோக்குமிடத்து யாடு மாடு முதலியவற்றின் தசையும் அருவருக்கத்தக்க முடைநாற்றமும் நச்சு நீரும் உடையனவேயாகும். மருத்துநூற் புலமையில் மிகச் சிறந்து விளங்கும் ஒருவர் ஊன் எல்லாம் நச்சு நீர் உள்ளனவென்றும், ஊன் தின்னும் உயிர்கட்கெல்லாம் அந்நச்சுநீர் இரத்தத்திற் கலந்து பல கொடிய நோய்களை வருவிக்கின்றதென்றும் நன்கு ஆராய்ந்து விளக்கியிருக்கிறார். அவர் தாமிருக்கும் மருத்துவக் கழகத்தில், மற்ற இடங்களில் தீராத நோய்களையெல்லாம் தீர்த்துக்கொள்ளும் பொருட்டு வரும் நோயாளிக்கெல்லாம் காய் கனி கீரை கிழங்கு வித்து முதலானவைகளையும் ஆவின் பாலையும் உணவாகக்கொடுத்து அவர்கொண்ட அக்கொடிய நோய்களைத் தீர்த்துவிடுகின்றார் என்றும் அறிகின்றோம். தாஞ்சொல்லும் உண்மைகளை மெய்ப்படுத்திக்காட்டும் இப்புலவர்பெருமானது நூலை ஒரு சிறிது நோக்குவார்க்கும் ஊன் உண்ணுதலால்வருந் தீமை விளங்காமற்போகாது. ஆகவே, இறைவன் அசைந்துதிரியும் உயிர்களுக்கு உணவாக அசைந்து திரியா மரஞ் செடி கொடிகளையும் அவற்றின் பயன்களையும் வகுத்துக் கொடுத்திருக்க, அதற்கு மாறாக நடந்து அசைந்து திரியும் உயிர்களாகிய தமக்குள்ளே ஒன்றைஒன்று கொன்று தின்பன, இங்ஙனம் தின்பதனாலேயே தம்முயிர்க்குத்தீங்கினை வருவித்துக்கொள்கின்றன என்பது புலனாகின்றதன்றோ? செங்குருதி ஒழுக ஒழுக, உயிர் துடிக்கத்துடிக்கக் கொல்லுங் கொலைத் தொழிலால் வரும் ஊன் தன்னைத் தின்னும் உயிரைக் கொல்லாது விடுமோ! கொலைத்தொழிலால் வருவன கொலையினையே விளைக்கும் என்பதனை இனி உணர்த்தவன்றோ பட்டினத்தடிகளும்

> ''கொன்றனை அனைத்தும் அனைத்தும்
> நினைக் கொன்றன
> தின்றனை அனைத்தும் அனைத்தும் நினைத்
> தின்றன''

என்று அருளிச் செய்தனர். எனவே, ஊன் தின்பனவற்றிற்கு எல்லா நோய்களும் எல்லாத் துன்பங்களும் வருமென்றும், பயிர் பச்சைகளையும் அவற்றின் பயன்களையும் அருந்துவனவற்றிற்கு எல்லா நலன்களும் எல்லா இன்பங்களும் வருமென்றும் உணர்ந்து கொள்க.

இனி, ஊன் உடம்புகளின் வளர்ச்சிக்கும் நிலைபேற்றிற்கும் இன்றியமையாது வேண்டப்படும் முதற்பொருள்கள்: கந்தகம், எரிகந்தகம், தீக்கல், சாம்பருப்பு, உவர்மண், சுண்ணம், காந்தம், இரும்பு, காந்தங்கலந்த செம்பு, ஈயம் முதலியனவாகும். உயிரற்ற இவ் வன்பொருள்களை அப்படியே தின்று செரிக்கச் செய்து உடம்பிற்சேர்த்துக் கொள்ளத்தக்க ஆற்றல் மக்கள் முதல் ஈ எறும்பு இறுதியாக அசைந்து திரியும் உயிர்களின் தீனிப்பைக்கு இல்லை. எவ்வளவு வல்லமையுடையவனேனும் அவன் இரும்பையுங் கந்தகத்தையும் காந்தத்தையுந் தின்று உயிரோடிருத்தல் முடியாது. இம்முதற்பொருள்களை மக்களும் மற்றை அசையும் உயிர்களும் நேரே தின்னல் இயலாதாயினும், வேறு எந்த வகையிலாயினும் இவைகளை உடம்பிற் சேர்த்தாற்றான் நிலைபெறும். மற்று, இம்முதற் பொருள்கள் உடம்பிற் பொருந்தி அதனை உரப்படுத்துமாறு, அவற்றை உட்கொள்ளும் வழிதான் யாதெனில், மக்களாலும் மற்ற அசையும் உயிர்களாலுஞ் செய்யலாகாத அவ்வழியை இறைவன் இவ்வுயிர்கள் மேல் வைத்த இரக்கத்தால் மரஞ் செடி கொடிகளில் அமைத்து வைத்திருக்கின்றான். மரஞ் செடி கொடிகளில் மட்டுமே, நிலத்தின்கண் உள்ள இரும்பு எரிகந்தகம் கந்தம் காந்தகம் முதலான முதற்பொருள்களை நுண்ணிய வடிவில் வேர்களின் வாயிலாக இழுத்துத் தம்முடம்பிலும் அவ்வுடம்பின் உறுப்புகளாகிய அரை கோடு வளார்தளிர் இலை பூ பிஞ்சு காய் கனி கிழங்கு விதை முதலானவற்றிற்கு சேர்த்துக் கொள்ளும் ஆற்றல் அமைந்திருக்கின்றது. இவ்வாறு அவை சேர்க்கப்பட்டிருக்கும் புற்பூண்டுகளையும் அவற்றின் பயன்களையும் அசைந்து செல்லும் உயிர்கள் உணவாக உட்கொள்ளுதலால் அவற்றின்கண் உள்ள அம்முதற்பொருள்கள் எளிதிலேசெரித்து அவ்வுயிர்களின் உடம்புகளிற் கலந்து அவற்றை உரப்படுத்தாநிற்கும். இரும்பு எரிகாந்தகம் முதலாக நம்முடம்புகளுக்கு இன்றியமையாது வேண்டப்படும் இம்முதற் பொருள்களை நம்முடம்பிற் சேரத்தக்கவகையாய்ப் பதப்படுத்தி வைத்திருக்கும் புற்பூண்டுகளின் பயனை நாம் உட்கொள்ளுதலே, அவற்றை உடம்பிற் சேர்த்து உரப்படுத்துவதற்கு இயற்கையில் அமைந்த வழியாகும். இவ்வியற்கை அமைப்பின் திறத்தை உற்று நோக்கநோக்க உணவாகவும் மருந்தாகவும் உட்கொள்ளத்தக்கன புற்பூண்டுகளும் அவற்றின் பயன்களுமேயல்லாமற்பிற அல்லவென்பது திண்ணமாய்ப்பெறப்படும், இஃது இவ்வாறிருப்பவும், இதனை உணராமல் இரும்பு செம்பு வெள்ளி தங்கம் கந்தகம் முதலானவைகளிற் செய்த மருந்துகளை மக்கள் மிகுவிலை கொடுத்து வாங்கியுண்டு தம்முடம்பை வீணே கெடுத்துக்கொள்கின்றார்கள். மருத்துவர்களும் இவ்வுண்மையை ஆராய்ந்துபாராமற், பேருழைப்பும் பெருஞ்செலவுஞ் செய்து இவற்றால் மருந்துகள் முடித்துக்கொடுத்து நோயையும் நீக்கமாட்டாமற் கடவுள் கொடுத்த உடம்பையும் பாழாக்கி விடுகின்றனர்: பசியெடுத்த

போது அப்பசி நோயை நீக்குதற்குப் பயிர்பச்சை களையும், அவற்றின் பயன்களையும், அருந்துதல் போல நோய் அடுத்தபோதும், அதனை நீக்குதற்குப் பச்சிலை மருந்துகளை உண்ணுதலே பொருத்தம் உடைத்தாம் என்க. இங்ஙனம் உணவாகவும் மருந்தாகவும் உட்கொள்ளுதற்கேற்ற புற்பூண்டுகளை விடுத்து. ஐயன்படைத்த யாடு மாடு பன்றி மான் மரை மீன் கொக்கு குருவி கோழி முதலான அசைந்து திரியும் உயிர்களைக் கொன்று அவற்றின் தசையை உணவாக அடைத்தல் எவ்வளவு கொடுமையுந் தீங்கும் உடைத்தாம்!

புற்பூண்டுகளை உணவாகக் கொள்ளுதலே பொருத்தமென்றாலும், அப்புற் பூண்டுகளைத்தவிர வேறு இறைச்சியே தின்னாத யாடு மாடு பன்றி முதலியவற்றின் தசையைத்தின்னுதலும் அப்புற் பூண்டுகள் தின்னுதலையே ஒக்குமாதலின் அது குற்றமாகாதெனின் நன்று சொன்னாய், புற் பூண்டுகளையும் அவற்றின் பயன்களையும் நேரே உட்கொள்ளுதலால் உண்டாகும் வலிவும் பயனும், அவற்றைத்தின்னும் யாடு மாடுகளைத் தின்பதனாற் சிறிதும் உண்டாகா; ஏனென்றாற் பயிர் பச்சைகளின் வலிவான பகுதி முழுதும் அவற்றைத் தின்னும் யாடு மாடு முதலிய விலங்குகளாற் பயன்படுத்தப்பட்டது போக அவ்வுயிர்களைக் கொன்ற பின் அவற்றின் தசையில் மிஞ்சியிருப்பன அவற்றின் சக்கைகளே யாகும். இச்சக்கைகள் உள்ள இறைச்சியைத் தின்பதனால் மக்களுக்கும் புலி கரடி ஓநாய் சிங்கம் முதலான உயிர்களுக்கும் யாது வலிமை வரப்போகின்றது.

உலகத்தின்கண் நடைபெறும் கடுமையான தொழில்களெல்லாம் புற்பூண்டுகளைத் தின்னும் விலங்கினங்களினாலேயே செய்யப்படுகின்றன. எருது குதிரை கோவேறு கழுதை யானை ஒட்டகம் என்னும் உயிர்கள் புல்லையும் வைக்கோலையும் தின்று குளிர்ந்த தண்ணீரைப் பருகுகின்றனவே யல்லாமல் மற்ற உயிர்களைக்கொன்று தின்னக் கண்டதில்லையே. அவ்வாறிருந்தும், அவைகள் ஆங்காங்குச் செய்யும் உழைப்பான தொழில்களைப் போல், இறைச்சி தின்னும் புலி கரடி சிங்கம் ஓநாய் முதலான மறவிலங்குகள் செய்யக்கண்டதுண்டோ? இவைகள் பற்களும் நகங்களுங் கொடுஞ் சினமும் உடைமையால் வலிமையுடையனபோற் காணப்படுகின்றனவே யல்லாமல் உண்மையில் அவை அஃது உடையன வல்ல. பெருஞ்சுமை ஏற்றிய ஒரு பெரு வண்டி நுகத்தின் ஒரு பக்கத்தில் ஓர் எருத்துமாட்டினையும் மற்றொரு பக்கத்தில் ஒரு புலி அல்லது ஒரு சிங்கத்தினையும் பூட்டி இருபது நாழிகை வழி நடத்தினால் எருதைப்போற் சிங்கம் அதனை ஒறுத்து இழுக்குமோ? ஒரு நாழிகை வழி கூட அஃது இழுக்கமாட்டாது. இன்னும், புல்லையுந் தழைகளையும் மேய்ந்து அருவி நீரைக்குடிக்குங் காண்டாமிருகம் என்னுங்கல்யானையின் வலிமையை என் என்போம். இது பெரிய மரங்களையும் தன் முகத்திலுள்ள கொம்பில் தகர்த்தெறிவதோடு, அம்மரங்களின் வலிய கிளைகளையும் துகளாக நறுக்குகின்றது. யானையோ மலைமுகங்களிலுள்ள பெரியபெரிய தேக்குமரம், பாலைமரம் ஆச்சாமரம் முதலியவைகளையெல்லாந் தனது தும்பிக்கையால் எளிதாக எடுத்துக் கொண்டு வந்து மலையின் அடிவாரங்களிற் சேர்க்கின்றது. நீண்ட பெரும் பாலை நிலங்களையெல்லாம் கடந்துசென்று வாணிகஞ் செய்வதற்கு உதவி புரிந்து வரும் ஒட்டகங்களின் உதவி எவ்வளவு பாராட்டத்தக்கதாயிருக்கின்றது! புல்லையுந் தழைகளையும் தின்னும் இவ்விலங்குகளின் உதவியின்றி மக்கள் உயிர் வாழல் முடியுமோ! தூய தீம்பாலைத்தரும் பசு நமது நல்வாழ்க்கைக்கு

---

## திருநீறு பூசுவது ஏன்?

சைவர்கள் திருநீற்றினை இட்டுக் கொள்கிறார்கள். திருநீறு என்பது சாம்பல்தான். காணும் இந்த உலகமும், எல்லாப் பொருள்களும், நாமும் கடைசியில் அழிந்து சாம்பல் ஆவோம் என்பதைக் குறிப்பதே திருநீற்றின் கருத்தாகும். இந்த நிலையாமை உண்மையை உணர்த்தவே சைவர்கள் திருநீறு அணிகிறார்கள். நாம் அழிந்து ஒரு நாள் சாம்பலாவோம் என்னும் நிலையாமை உண்மையை நாம் உணர்ந்தால்தான் 'நான்' 'எனது' என்னும் ஆணவத்தால்வரும் சண்டைச்சச்சரவுகள் இலையாகும். அதனால் தீவினைகளைச் செய்ய அஞ்சி, நல்வினைகளைச் செய்யமுற்படுவோம்.

---

எவ்வளவு இன்றியமையாததாயிருக்கின்றது. இவ்வினிய விலங்குகளைப் போல் உயிர்களைப் கொன்று தின்னுங் கொடிய விலங்குகள் எந்த வகையாலேனும் நமக்குப் பயன்படுவதுண்டோ? பயன்படாமை மட்டுமா? அவைகள் மக்களையும் அடித்துக் கொல்லுங் கொடிய இயற்கையுடையனவாகையால் அவைகள் இருக்கும் இடங்களைக் கண்டால் மக்கள் எவ்வளவு திகிலடைந்து நடுங்குகின்றனர். இவைகளைப் போலவே, ஊன் தின்னும் மாந்தரும் பயன்படமாட்டார். அவர்களுக்குக் கொடிய தன்மையும், அதனால் வலிமைக்குறைவும் அயர்வும் உண்டாதலால் அவர்கள் மற்றவர்களோடு அன்புடன் அளவளாவிப் பயன்படுந் தொழில்களையுஞ் செய்யமாட்டார்.

ஆனாற், சைவ உணவு கொள்ளும் மக்களோ கடவுள் வகுத்த இயற்கைக்கு இசைந்து நடப்பவர்களாயிருத்தலால், அவர்கட்குக் கொடுந்தன்மைஉண்டாகாது; அவர்கள் எடுக்கும் உணவு தூயனவாய் நோய் அணுகாதனவாய் எத்தகைய வருத்தமான தொழில்களையுஞ் செய்து முடித்தற்கேற்ற வலிவு வாய்ந்தனவாயிருக்கும்; அவர்களுடைய மூளை தூயதாய் இருத்தலால் அதனைப்பற்றிக் கொண்டு நிகழும் அவருடைய அறிவுந் தூயதாய் நுட்பம் பொருந்தியதாயிருக்கும். இவ்வுண்மையை விளக்குதற்குச் சில உண்மை வரலாறுகளை இங்கெடுத்து காட்டுகின்றோம்.

நீண்ட வழி நடப்பதிற் புகழ் பெற்ற ஒருவர் சைவவுணவே உட்கொள்பவர். இவர் நான்குமுறை நீண்ட வழி நடந்து பந்தயம் பெற்றதோடு, 1905-ஆம் ஆண்டு ஐந்தாம் முறையாக ஒரு போர் மறவர் கூட்டத்தோடு நடந்து வென்று பரிசில் பெற்றார். வழி நடந்து பரிசு பெற்றவுடனே இவரை ஒரு பெயர் பெற்ற மருத்துவர் ஆராய்ந்து பார்த்து இங்ஙனம் நீள்வழி நடந்ததனால் இவருடம்பிற்கு ஏதொரு கெடுதியும் நேராதது கண்டு வியந்தார்.

ஆங்கில அரசின் படையிற் காய மருத்துவம் பார்த்து வந்த ஒரு சிறந்த மருத்துவர் பின் வருமாறு கூறுகின்றார். "பல தேயங்களிற் பல வகையாயெல்லாம் உழன்றும் என் உடம்பு செம்மையாகவேயிருக்கின்றது. அளவாக உண்பதனாலுங் கடுமையாக உழைத்தவினாலும் யான் இரண்டு படையிருப்புகளைக் கடத்திவிட்டேன்; இன்னும்

ஒரு படையிருப்பினையும் யான் தாங்கக் கூடும். நான் ஊன் உணவு எடுப்பதேயில்லை. கொடிமுந்திரிச் சாறேனும் வித்தலிறக்கிய நீரேனும் மற்றெந்த வகைச் சாராயமேனும் யான் பருகுவதுமில்லை. யான் கம்பளியுடுப்பும் அணிவதில்லை. காற்றும் மழையுஞ், கடுங் குளிர்ச்சியும் எனக்கு ஒரு பொருள் அல்ல'' இதனால், மக்கள் உடம்பின் சூட்டைப்பாது காப்பதற்கு இறைச்சியும் சாராயமும் வேண்டுமென்று கூறுவார் சொல், வெறும் பொய்யேயாதல் காண்க.

*1903*—ஆம் ஆண்டில் நூற்று ஏழு ஆண்டு வாழ் நாள் உடையராயிருந்த ஒரு படைத்தலைவர் தம் வாழ் நாளின் இடையே நோயால் வருந்திக் கூன்முதுகு உடையராகி வாழ் நாள் முதிரா முன்னரே முதுமையடைய பெற்றதிலிருந்து மன வெறுப்பு உடையராய் இறைச்சி தின்பதை அறவே விட்டுச் சைவவுணவையே ஒழுங்காக உட்கொண்டு வர அவர்க்கிருந்த நோயும் விலகி, அவருடம்பின் கூனும், நிமிர்ந்து வலிமையும் இளமையும் பெறலானார். இவர் தமது நூற்று மூன்றாம் ஆண்டில் நாள் ஒன்றுக்கு இருபது நாழிகை வழி நடந்தும் இளைப்புங்களைப்பும் இன்றிச் செவ்வையான நிலையிலேயே இருந்தார். இவர் தமது பழக்கத்தைப் பற்றிப் பின் வருமாறு கூறுகின்றார்.

''நீண்ட நாள் செம்மையாக உயிர் வாழும் பொருட்டு யான் எனது உடம்பைப் பதப்படுத்தத் துவங்கிய பொழுது, உயிர்களைக் கொன்று எடுக்கும் இறைச்சியை என் உணவினின்றும் அறவேவிட்டொழித்தேன். யாடு மாடு அறுக்குங் கொட்டில்களிற் கொல்லப்பட்டுத் தொங்கக் கட்டியிருந்த அவற்றின் இறைச்சியை யான் பார்த்தபொழுது, அவற்றில் உணவுக்காகும் பகுதியைவிட நோயையுந் துன்பத்தையும் விளைக்கும் பகுதிகளே மிகுந்திருத்தலை உணர்ந்தேன்.

''வித்துக்கள் பழங்கள் பருப்புகள் காற்கறிகளையே யான் உண்ணுகின்றேன். காய்ச்சிய வெந்நீரையேனுங் காய்ச்சி வடித்த தண்ணீரையேனும் பருகுகின்றேன். சுருட்டுகளேனுஞ் சிறு சுருட்டுகளேனும் யான் பிடிப்பதும் இல்லை. கொடி முந்திரிச் சாறேனும் மயக்கந்தருஞ் சாராயங்களேனும் யான் குடிப்பதுமில்லை. தேத் தண்ணீருங் காப்பித்தண்ணீரும் யான் முற்றுமே விலக்கிவிட்டேன். ஏனெனில் இவற்றில் உணவாகத்தக்கது எதுவுமே இல்லை.; இவற்றைப் பயன்படுத்துவது நமது இயற்கைக்கு முற்றும் மாறாயிருக்கின்றது.''

நீண்டகாலம் உயிர் வாழ்ந்த முதியோரின் பழக்க வழக்கங்கள் இங்ஙனம் இருத்தலை யறியுங்கால் ஊன் உண்ணுதலால் வருந்தீமையுங்காய்கறிகளை யுண்டலால் விளையும் நன்மையும் நன்கு விளங்குகின்றன அல்லவோ. இனிய காய்கறிகளை உணவாகக் கொள்ளும் மக்கள் ஒருவர் இருவர்க்கு மட்டுமே இந்நன்மைகள் விளைகின்றன வென்று நினைத்தலாகாது; காய் கனி,கீரைகளையே உணவாக அருந்தி வரும் பழக்கமுடைய மக்கட் கூட்டத்தார் பலரும் இத்தகைய நன்மைகளையே அடைந்து வருகின்றனர். இவ் வுண்மையைவிளக்குதற்குஞ் சில இங்கு எடுத்துக் காட்டுவாம்.

''கார்ப்பேத்தியா மலைப் பக்கங்களிலிருக்கும் மக்கள், உலகத்திலுள்ள மாந்தரில் மிகச் சிறந்த சுருசுருப்பும் வலிமையும்வாய்ந்தவர்களாயிருக்கின்றனர். அவர்கள் ஒட்டென்னும் அரிசியும் கோதுமை அப்பமும் உருளைக் கிழங்குமே எந்நாளும் உண்டு உயிர் வாழ்பவர்கள். நெப்போலிய மன்னனுக்கு இம்மக்களிற் பலர் போர் மறவராய் அலுவல் பார்த்தனர். அப்போது அவர்கள் நாள் ஒன்றுக்கு நாற்பது நாழிகை வழி நடந்து, கடும் போர் புரிந்து மறுநாட் காலையில் மறுபடியும் போர்புரிதற்குத்தக்க ஆற்றலும் புதுமையும் வாய்ந்திருந்தனர்.''

''தென் அமெரிக்காவின் செப்புச் சுரங்கங்களில் உழைக்கும் கூலியாட்கள் நாள் ஒன்றுக்கு அறுபத்தேழுவீசை எடையுள்ள செப்பு மண் மூட்டை சுமந்துகொண்டு ஒரு நாள் ஒன்றுக்கு பன்னிரண்டு முறை இருநூற்று நாற்பது அடி உயரம் ஏறுகின்றனர். அவர்கள் உட்கொள்ளும் உணவு முழுதுங்காய்கறிகளே. அவர்கள் காலையுணவாக எடுப்பன பன்னிரண்டு அத்திப்பழங்களும் இரண்டு சிறிய கோதுமை அப்பத்துண்டுகளுமேயாம்; அவர்களது பகல் உணவு, அவித்த பயறுகளேயாம்; இராச்சாப்பாடு வறுத்த கோதுமை அரிசி. இன்னும் உள் நாடுகளிலிருந்து வரும் ஸ்பானியர்கள் பண்டங்கள் நிரம்பிய மூட்டைகளைச் சுமந்து செல்லும் அலுவல் பார்க்கிறார்கள்; இவர்களும் முழுதுஞ் சைவவுணவே உட்கொள்பவர்கள். இவர்கள் திண்ணிய வலிய பெரிய உடம்டையவர்கள். இவர்கள் சுமக்கும் மிகப்பெரிய கோணிப்பை மூட்டையை இவர்கள் முதுகின் மேல் தூக்கிவைப்பதற்கே மூன்று நான்கு பேர் வேண்டும். இத்தகைய மூட்டைகளைச் சுமந்துகொண்டு இவர்கள் ஊடேஊடேயுள்ள செங்குத்தான மலைகளின் மேலும் ஏறியிறங்கியபடியாய் ஒரு நாள் ஒன்றுக்கு ஐம்பது நாழிகை வழி விரைவாய் நடந்து நாட்டினுட் செல்வார்கள். இவர்களோடொப்ப நடத்தல் பொதுவாக மற்ற ஆட்கட்கு ஏலாது.''

இன்னும், அமெரிக்காவிற் பல அரும்பண்டங்கள் செய்யும் பெரிய ஒரு தொழிற்சாலைக்கு உரிய தலைவர், தம்மிடம் வேலை பார்க்குந் தொழிலாளிகட்குப் பல திறப்பட்ட உணவு கொடுப்பதால் வரும் நன்மைகளை அளந்தறிய வேண்டி, அவர்களெல்லாரையும் மூன்று பகுப்புகளாகப் பிரித்து, அவருள் முதற்பகுப்பாருக்கு இறைச்சியுணவும், இரண்டாம் பகுப்பாருக்குக் காய்கறிகளையும், மூன்றாம் பகுப்பாருக்கு இறைச்சியுங் காய்கறியுங் கலந்த உணவுங் கொடுத்து வந்தார். இவ்வாறு கொடுத்து வந்த பின் அவர்களது வலிமையினையும் அவர்கள் செய்யும் வேலையின் அளவினையும் ஆராய்ந்து பார்க்கச் சைவவுணவு உட்கொண்ட பகுப்பாரே மற்றிரண்டு பகுப்பாரை விட உடம்பு வலிவிலும் வேலையை முடிக்கும் அளவிலும் மிகுந்திருப்பக்கண்டு, மற்ற இரு பகுப்பாருக்கு இங்ஙனமே சைவவுணவு கொடுக்கும்படி கற்பித்தார். அவர்களுஞ் சைவவுணவு கொண்ட சில திங்களுக்குப்பின் முதல் வகுப்பாரைப் போலவே மெய்வலிமையிலும் வேலைத் திறத்திலும் மேம்படுவாராயினர்.

இங்ஙுனமாகச் சைவவுணவு உட்கொள்ளும் அயல்நாட்டார்மட்டுமேயன்றி நமது அருமைச் செந்தமிழ்நாட்டிற் சைவவுணவே முழுவதும் உட்கொண்டு உயிர் வாழுஞ் சைவவேளாளரும் பார்ப்பனரும் வேறு சிலரும் வலிய உடம்புஞ் சுருசுருப்பான முயற்சியுஞ் தெளிந்த அறிவும் உயர்ந்த நிலையும் உடையவர்களாய் இருக்கின்றனர். மேலும், ஊன் தின்பவர்கட்கு வருஞ் செரியாமை, மலச்சிக்கல், சன்னி, திமிர்ப்பிடிப்பு, காக்காய் வலி, பிளவை, சூலை, பொருத்துப் பிடிப்பு, ஈரல் குண்டிக்காய் நெஞ்சு முதலியவற்றைப் பற்றிவரும் வலி, தொழுநோய் முதலிய கொடு நோய்கள் சைவவுணவு உட்கொள்பவர்கட்கு வருவதில்லை யென்றும், இந்நோய்களால் துன்புறுபவர்கள் இறைச்சியை அறவே ஒழித்துக் காய்கறிகளைத் தெரிந்துண்பதனால் அந்நோய்கள் விலகிப் போகின்றன வென்றும் புகழ் பெற்ற ஆங்கில மருத்துவர்கள் ஆராய்ந்துரைக்கின்றார்கள்.

***



பழநி அருள்மிகு தெண்டாயுத பாணி சுவாமி ஆலயத்தில் பங்குனி உத்திரத் திருவிழா மிகச் சிறப்பாகக் கொண் டாடப் பட்டது. இந்துசமய அறநிலைய ஆட்சித் துறை ஆணையர் திரு க.சுந்தரமூர்த்தி ஐ.ஏ.எஸ். அவர்கள் வெள்ளி இரதப் புறப்பாட்டினைத் தொடக்கி வைக்கிறார்கள். ஆலயத் தக்கார் திரு க. பொன்னுசாமி அவர்களும், துணை ஆணையர் திரு கே.எஸ். சோம சுந்தரம் பி.ஏ. பி.எல்., ஆகியோரும் உடன் உள்ளனர்.





## அப்பர் அருள்மொழிகள்

மனிதர் காள்இங்கே வம்மொன்று சொல்லுகேன்
கனிதந் தாற்கனி உண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈசன் எனுங்கனி
இனிது சாலவும் ஏசற்றவர் கட்கே.

பூக்கை கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கை கொண்டரன் நாமம் நவில்கிலார்
ஆக்கைக் கேயிரை தேடி அலமந்து
காக்கைக் கேஇரை யாகிக் கழிவரே..

பெருகலாம் தவம் பேதமை தீரலாம்
திருகலாகிய சிந்தை திருத்தலாம்
பருகலாம் பரமாய தோர் ஆனந்தம்
மருகலானடி வாழ்த்தி வணங்கியே.

கோடி தீர்த்தம் கலந்து குளித்தவை
ஆடி னாலும் அரனுக் கன்பில்லையேல்
ஓடு நீரினை ஓட்டைக் குடத்தட்டி
மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே.

நம் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்கடன் அடியே னையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே.

திருப்பாதிரிப் புலியூர் அருள்மிகு பாடலேசுவரர் ஆலயத்திற்குத் தமிழக அரசு அறநிலையத்துறையின் செயலர் திரு சுகவனேஸ்வரர் ஐ.ஏ.எஸ். அவர்கள் வருகைதந்து அருள்மிகு துர்க்காம்பிகை இலட்சார்சனையைத் துவக்கி வைக்கிறார். உதவி ஆணையர் திரு லிங்கமராஜா மற்றும் நிர்வாக அதிகாரி திரு S. முனிசாமி ஆகியோர் உடன் உள்ளனர்.



# பாரதப்போரில் பார்த்தசாரதி

—டாக்டர்
த. அமிர்தலிங்கம்



(முன் தொடர்ச்சி)

தேவர்களின் தலைவன் இந்திரனாலும் வெல்ல முடியாத வலிமையும், வரமும் பெற்று விளங்கிய நிவாத கவச அரக்கர்கள் மூன்று கோடிப் பேரையும், காலகேய அரக்கர்கள் அறுபதினாயிரம் பேரையும் வெற்றி கொண்ட மாபெரும் வீரனே அர்ச்சுனன். அவனிடத்தில் சிவபெருமான் தந்த பாசுபதாத்திரம் உண்டு. அக்கினி பகவான் அளித்த காண்டீபம் உண்டு. இராவணனின் அடல் அழித்த அனுமனே தேர்க்கொடியாகி நிற்கும் துணைப்பலமும் உண்டு. இத்தனைக்கும் மேலாக கண்ணபெருமானே பார்த்தசாரதியான பாக்கியமும் அவனுக்கே உண்டு. இத்தனை இருந்தும் துரியோதனுக்காகத் திரண்டிருந்த பதினோரு அக்குரோணி சேனைகளை ஒரு சேரப் பார்வையிட்டுக் காண்டீபத்தைக் கைநழுவ விட்டான் என்றால், அதற்கு அச்சமா காரணம்? அச்சம் என்ற வார்த்தையையே அறியாதவன் - அதனை மதியாதவன் மாபெரும் வீரன் ஆகிய விசயன். அப்படிப்பட்ட விசயன் ''எனக்கு நாடும் வேண்டாம், நகரும் வேண்டாம், போர் நான் செய்யமாட்டேன், என்னை விட்டு விடுங்கள், நான் காட்டிற்கே போய் விடுகிறேன்'' என்று இருபடைகளும் அணி வகுத்து மோதப் போகின்ற அந்த இறுதி நேரத்தில் அப்படியொரு திடீர் முடிவுக்கு வந்தான் என்றால் அதற்கு என்ன காரணம்? பெரியவர்களைப் போற்றும் அர்ச்சுனனுடைய அருங் குணம் தான் அதற்குக் காரணம்.

துரியோதனனையும், அவனுடைய தம்பிமார்களையும், சகுனியையும், கர்ணனையும் வெல்லவும், கொல்லவும் அர்ச்சுனனுக்குத் தயக்கமும் இல்லை. மயக்கமும் இல்லை. இதை அஞ்ஞாத வாசத்தின் இறுதியில் துரியோதனனால் கவரப்பட்ட விராட மன்னனின் ஆநிரைகளை பிருகந்நளை என்ற பேடி வடிவத்தில் மீட்க வந்து, பின் அஞ்ஞாத வாசம் நிறைவு பெற்று விடுகிறபடியால், தன்சுய வடிவில் வெளிப்பட்டு, துரோணர் வீடுமர் முதலான தம்மரியாதைக்குரிய பெரியோர்களிடம் போரிட நேர்ந்த சந்தர்ப்பத்திலேயே அர்ச்சுனன் கூறுவதைக் காணுகிறோம்.

''யாதுமொன் றறியாவென்னை இவனலாதிலை என்றிந்த
மேதினி மதிக்குமாறு இன்முதற் படைகள் யாவும்
தீதறத் தந்த வுண்மைத் தெய்வநீ என்றால் பஞ்ச
பாதகந் தன்னிலொன்றுன் பதயுக பிழைப் பதையா''

-நிரை மீட்சிச்சருக்கம். 88

இது அர்ச்சுனன், துரோணரை நோக்கி கூறிய பணிவு மொழியாகும். துரோணராலேயே ''வில்லுக்கு விசயன்'' என்று உலகம் புகழ்ந்துரைக்குமாறு தான் ஆற்றல் பெற்றதை அன்புடன் எடுத்துக்காட்டிய அர்ச்சுனன், துரோணரை ''உண்மைத் தெய்வம்'' என்று போற்றி, அவருடன் போர் செய்வதும், அவருக்குத் தீங்கு இழைப்பதும் பஞ்சமா பாதகங்களில் ஒன்றாய் விடும் என்ற தன் அச்சத்தைத் தெரிவிக்கிறான். மேலும் துரியோதனன் அல்லாத துரோணர், கிருபர், அசுவத்தாமன், வீடுமர் ஆகியோருடன் போர் புரிவது நிச்சயம் பாவமே ஆகும் என்ற தன் பயத்தையும் அர்ச்சுனன்

''மன்னொடு சூழநின்ற மாசுணம் உயர்த்த கோவை
மின்னொடும் உருமேறென்ன வெகுண்டமர் புரிவதல்லால்
நின்னொடுங் கிருபனோடும் நின்மகனோடும் முந்தை
தன்னொடும் புரியேன் வெம்போர் தக்கதோ சரதம் பாவம்''

-நிரை மீட்சிச் சருக்கம் 89

என எடுத்துரைப்பதையும், அதற்குத் துரோணர் ''நாங்கள் செஞ்சோற்றுக் கடன் கழிப்பதற்காகத் துரியோதனுக்காகப் போர்புரிய வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம். ஆகவே நீ எங்களை எதிர்த்துப் போர் செய்தே ஆக வேண்டும்'' என வற்புறுத்துவதையும், அதற்குப் பிறகு மனம் தெளிவு பெற்று அர்ச்சுனன் போர் செய்து துரோணர், வீடுமர், அசுவத்தாமா, கிருபர், கர்ணன் முதலான அன்னவரையும் வென்று, துரியோதனன் மகுடத்தையும், தன் அம்பினால் சிதைத்து, மகுடபங்கப் படுத்தி, ஆநிரைகளை மீட்டு வெற்றிக் கொள்வதையும், விராட பருவத்தில் மிக விரிவாகக் காணுகின்றோம்.




மேவரு ஞானா னந்த வெள்ளமாய் விதித்தோ னாகி
மூவரு மாகி அந்த மூவர்க்குள் முதல்வன் ஆகி
யர்வரும் யாவு மாகி இறைஞ்சுவார் இறைஞ்சப் பற்பல்
தேவரு மாகி நின்ற செங்கண்மால் எங்கள் கோவே.

— முதற்போர்ச் சருக்கம், கடவுள் வாழ்த்து

---

வண்டியில் கட்டிய குதிரையைப் போல்ஆத்மா சரீரத்தில் கட்டப்பட்டு நிற்கிறது. காண்பது கண் அல்ல. கண்ணைக் கருவியாகக் கொண்டு காண்பது ஆத்மா. பேசுவது நாக்கு அல்ல, நாக்கைக் கருவியாகக் கொண்டு பேசுவது ஆத்மா. காதைக்கொண்டு இதைக்கேட்பேன் என்பது ஆத்மா. மனதும் ஆத்மா அல்ல., இதை எண்ணுவேன் என்று மனதைக் கொண்டு எண்ணுபவனும், மனதை அடக்குபவனும் ஆத்மா. மனதையே கண்ணாகக் கொண்டு தியானத்தில் மூழ்கிப் பரமாத்மாவைக் கண்டு ஆனந்தம் கொள்பவன் ஆத்மா. இவ்வாறு உடலினின்றும், இந்திரியங்களினின்றும் உடலின் செயல்களினின்றும், மனதினின்றும் வேறான பொருளே ஆத்மா. அது தன்னில் தானே பரமானந்தம் அடையும். சரீரம் வேறு, அது வேறு.

—இராஜாஜி

---

அப்பொழுதிலிருந்தே அர்ச்சுனன் மனத்தை வாட்டிக் கொண்டிருக்கும் மிகப் பெரிய கவலை, ஆசிரியரை எதிர்த்தும், தாத்தாவை எதிர்த்தும், தனக்கு எந்த வகையிலும் தீமை செய்யாத வணக்கத்திற்கும், மரியாதைக்குமுரிய பெரியவர்களை எதிர்த்தும் போர் செய்வதும், அவர்கள் உயிரை வதைப்பதும் கொடிய பாவமே ஆகும் அல்லவா என்ற சிந்தனையேயாகும். பாவம் செய்தவன் துரியோதனனும் அவனுடைய தம்பிமார்களும். அவர்களைக் கொல்வது நியாயமே. ஆனால் அவர்களுக்காக திரண்டு நிற்கும் 11 அக்குரோணி சேனைகளையும் கொல்வது எப்படி நியாயமாகும் என்றே மயங்கியது அவன் நெஞ்சம். அந்த அர்ச்சுனனின் மயக்கமே போர்த் தொடங்கப் போகும் அந்த இறுதி நேரத்தில் அவனைத் தடுமாற வைத்தது. காண்டீபத்தைக் கையிலே பிடிக்காமல், களத்திடை விழச் செய்தது. இவ்வாறு அர்ச்சுனன் மனம் தடுமாறிப் போர்புரியமாட்டேன் என்று மறுத்த நேரத்தில் கண்ண பரமாத்மா அர்ச்சுனன் மனம் தெளிய அவனுக்குப் பல உண்மைகளை உபதேசித்தார். அவ்வாறு உபதேசித்த உபதேசங்களே ''பகவத் கீதை'' எனப் பாருலகம் முழுவதும் போற்றப் படுகிறது.

''அர்ச்சுனா! தந்தை, தாய், மக்கள், தாரம் நண்பர், பகைவர் என்ற பலப்பல எண்ணங்கள் மாயையின் பாற்பட்டவை. மாயையை வென்று வாழ்வதே அறிஞர்கள் தம் கடமையாகும். ஆத்மாக்களுக்கு உடல்களை அளிக்கும் பரம்பொருள் வேறு யாருமல்ல. நானேதான். உடல்கள் அழியுமே தவிர ஆத்மாக்கள் (உயிர்கள்) அழிவதில்லை. மறுபடி பிறக்கக் கூடிய ஆத்மாக்கள் இழக்கக் கூடிய உடல்களுக்காக வருந்துவது வீண் செயலாகும். ஐம்பெரும் பூதங்களால் ஆகிய உடல்களை உயிர்களுக்கு வழங்கி அவ்வுயிர்கள் தோறும், பாலுக்குள் நெய்யைப் போல இருந்து செயல்படக்கூடிய பரம்பொருள் நானாக இருக்க, என் கட்டளையை ஏற்றுக் காரியம் ஆற்றவேண்டுவதே உன் கடமையாகும், கடமையை யாற்று, பலன்களைப் பாராதே. பரம்பொருளாகிய என்னுடன் நீயும் பிரிவொன்றின்றி இணைந்தே என்னுடைய அவதாரங்கள் தோறும் செயல்பட்டு வந்திருக்கிறாய். அப்படியிருக்க இப்பொழுது மட்டும் உன்னை மாயை மறைப்பது ஏன்? ஒரு அவதாரத்தில் நான் நாராயணன், நீ நரன். மற்றொரு அவதாரத்தில் நான் இராமன், நீ இலட்சுமணன், இப்பொழுது இந்த அவதாரத்தில் நான் கிருட்டிணன், நீ அர்ச்சுனன். உலகிலுள்ள உயிர்க் குலங்களின் நன்மைக்காகவே அவதாரங்களை எடுத்து நாம் செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம். இப்பொழுது இந்த யுத்தம் நடப்பதும் கூட உயிர்க் குலங்களின் நன்மைக்காகவே; ஆகவே, மயக்கம் ஒழித்து நீ மறுபடியும் காண்டீபத்தைக் கையில் எடு. போர் செய்'' என்று கண்ண பெருமான் அர்ச்சுனனுக்கு உபதேசிக்கிறார். அவருடைய அரிய அந்த உபதேசங்களை வில்லிபுத்தூராரின் திருவாக்கினாலும் நாம் காணலாம்.

''மாயையென்றொருத்தி தன்பால் மனமெனும் மைந்தன் தோன்றித்
தூயநல்லறிவன் தன்னைத்தோற்றமின்றாக்கி வைத்தான்
தாயொடு தந்தை மக்கள் தாரம் என்றிவர்பால் வைத்த
நேயமும் அவன்தனாலே நிகழ்ந்ததோர் நினைவு கண்டாய்.

—முதற்போர்ச் சருக்கம் 2

அந்த நல்லறிவன் தன்னை யறிந்தவர் அறிஞராவார்
தந்தையால் வகுக்கப்பட்ட சராசரப் பொருள்கன்தோறும்
வந்தஆன் தீம்பால் நெய் போல் உயிர்க்குயிராகி வாழும்
பந்தமதுணர்ந்து நேரே பார்க்குங்காற் பகை யார்? நண்பார்?

— முதல் போர்ச் சருக்கம் 4

உம்பருமுனிவர் தாமும் யாவரும் உணராவொன்றை
இம்பரின்றுனக்கு நானே இசைவுறவுணர்த்தா நின்றேன்
ஐம்பெரும்பூதத்தாலும் அமைத்தன உடலம்யார்க்கும்
நம்பன் ஒருவன் உள்ளே ஞானியாய் நடத்துகின்றான்

–– முதற் போர்ச் சருக்கம் 5

என்னைநீ புகலக்கேண்மோ எங்குமாய் யாவுமாகி
மன்னியபொருளும் யானே மறைக்கெலாம் முடிவும்யானே
உன்னையான் பிறிவதில்லை ஒருமுறைபிறிந்துமேனான்
நன்னிலா வெறிக்கும் பூணாய் நரனுநாராயணனுமானோம்

— முதற் போர்ச் சருக்கம் 6

பின்னொரு பிறப்பில்யாமே இராமலக்குமப் பேர் பெற்றோம்
இந்நெடும் பிறப்பில் நீயும்யானுமாய் சண்டு நின்றோம்
நின்னிடை மயக்குமிந்த நேயமும் ஒழிகவென்று
தன்னிலை யவற்குக் காட்டித் தத்துவம் தெளிவித்தானே

— முதற் போர்ச் சருக்கம் 7

இவ்வாறு உபதேசித்து, பரம்பொருளாம் தன்னுடைய உண்மை சொருபத்தையும் அர்ச்சுனனுக்குக்

காட்டுகிறார் பார்த்தசாரதி, அச்சொரூபத்தை ஊனக் கண்ணால் காண்பது இயலாதாகையால், அர்ச்சுனனுக்கு ஞானக் கண்களையும் தந்து காண வைக்கிறார். பரம்பொருளின் உண்மை சொரூபத்தைப் பார்த்துத் தெளிவு கொண்ட பார்த்தன் நழுவவிட்ட தன் காண்டீபத்தை மீண்டும் கையில் எடுத்துக்கொண்டு போருக்கும் ஆயத்தமாகிறான். அப்பொழுது அவனுடைய தேர்க்கொடியில் வந்து நின்று கூத்தாடுகின்றான் வீர அனுமான்.

''செருச்செய்வான் வருசேனை வெண்டிரையையுங் கடப்பான்
பருச்சிலம்பினின் றுகைதரு பாவனை போல
உருச்செழுங்குடரெறிப்ப நின்றுலாவினன் உண்மைக்கு நின்று
அர்ச்சுனன் தடந்தேர் கொடியாடையில் அனுமன்''

அர்ச்சுனனின் கொடித்துணியில் உண்மையாகப் பிரத்தியட்சமாகி, முன் மகேந்திர மலைக்கும் இலங்கையின் பவள மலைக்கும் இடைப்பட்டிருந்த கடலைத் தாவிய பாவனையில் நின்று அனுமன் ஆரவாரம் செய்கின்றான். அனுமன் அர்ச்சுனனின் தேர்க்கொடியாவதற்கு இசைந்த அந்த வரலாறும் சுவையானதொன்றாகும்.

ஒரு சமயம் அர்ச்சுனன் இராமேஸ்வரம் சென்று சேதுசமுத்திரத்தில் நீராடிக் கடற்கரையில் சிறிதுநேரம் உலாவிக் கொண்டிருந்தான். அப்பொழுது அங்கே இருந்த ஒரு சிறிய குன்றின் மேல், சாதாரண குரங்கின் வடிவத்தில் அனுமன் அமர்ந்து இராமநாமத்தைச் ஜெபம் செய்து கொண்டிருந்தான். அனுமனை இன்னான் என அறிந்து கொள்ளாதவனாகிய அர்ச்சுனன் ''ஏ குரங்கே, நீயார்? இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்று வினவினான். அர்ச்சுனனின் கேள்விக்கு விடை கூறிய அனுமன் ''எவனுடைய பிரதாபத்தால் இராமபிரான் இச்சேதுவில் நூறு யோசனை தூரத்திற்குக் கற்களால் அணை கட்டினாரோ, எவனைச் சகாயமாகக் கொண்டு இராவணனாதி அரக்கர்களை வென்றாரோ, அவனேயான். என்பெயர் அனுமன்' என்பதாகப் பதிலைக் கூறினான். செருக்குடன் இவ்வாறு அனுமன் கூற, அர்ச்சுனனும் ஆஞ்சநேயரை நோக்கி 'இரகுராமர் சிறந்த வில்லாளியாயின், தம் அம்புகளினாலேயே அணை கட்டியிருக்கலாமே! நானாக இருந்திருந்தால் அம்பினாலேயே அணை கட்டியிருப்பேன்' என்று செருக்குடன் தன்னுடைய வில்லாற்றலை மிகுதிப்படுத்தி கூறினான். உடனே அனுமன் ''என்னைப்போன்ற வானர வீரர்களின் பாரத்தினால் அம்பினால் கட்டப்படும் அணை அமிழ்ந்துபோகும் என்றெண்ணியே இராமர் அவ்வாறு செய்யவில்லை. வேண்டுமானால் அர்ச்சுனா, அம்பினால் நீ இங்கே ஒரு அணையைக் கட்டிப்பார். என் கால் கட்டை விரல் கொண்டே அணையை கடலில் மூழ்கடித்துக் காட்டுகிறேன்'' என்றான். அதனைக் கேட்ட அர்ச்சுனன் ''நான் அம்பினால் இதோ அணை கட்டுகிறேன். அது உன் பாரத்தால் மூழ்கா விட்டால் எனக்கு என்னத் தரப்போகின்றாய்?'' என்று கேட்க ''என் பாரத்தால் அணை, கடலுக்குள் அமிழ்ந்து போகாவிட்டால் உன்தேர்க்கொடியின் கண் நின்று உன் யுத்த காலங்களில் உனக்கு வேண்டிய உதவியைப் புரிகின்றேன். ஆனால் என் பாரத்தால் அணை அமிழ்ந்து போகுமானால் நீ என்ன செய்யப் போகிறாய் என்பதை நீ எனக்குக் கூறு'' என அர்ச்சுனன் 'யான் அக்கினி

---

மனமொவ்வாத செயலைச் செய்யாதே. சமூக நன்மைக்கு மாறுபாடாகவாவது, விவேகக் குறைவாகவாவது, மனப் புகைச்சலுடனாவது நடந்து கொள்ள வேண்டாம். வீண் பேச்சுப் பேச வேண்டாம். உனக்குள் இருக்கும் பரம்பொருளைக் கௌரவிப்பாயாக. தைரியமும் நீதியும் பொருந்திய மனிதனாக வாழ்வாய். எந்த நிமிஷத்தில் வேண்டினும் உத்தரவு வந்தவுடன்செல்லுவதற்கு தயாராக இருக்கும் போர் வீரனைப் போல், மரணத்திற்குச் சித்தமாக இரு.

**—மார்க்க அரேலியர்**

---

பிரவேசம் செய்து உயிர் விடுகிறேன்' என்று உறுதி கூற, அவர்களுக்குள் போட்டி ஆரம்பமானது.

அர்ச்சுனன் தன் காண்டீபத்தை எடுத்து வளைத்து கணக்கற்ற கணைகளை ஏவி, நெருக்கமாகவும், உறுதியாகவும் ஓர் அணையைக் கடலின் மேல் கட்டினான். அனுமனும் கண நேரத்தில் தன் கால்கட்டை விரலால், அந்த அணையை அமிழ்த்திக் கடலில் மூழ்குமாறு செய்தான். அனுமனின் ஆற்றலுக்கு முன், தான் தோற்றுப் போனதை எண்ணி அவமானப்பட்ட அர்ச்சுனனும் தன் உறுதிமொழி மாறாமல் அக்கணமே விறகுகளை அடுக்கித் தீமூட்டி, அதில் பாய்ந்து உயிர்விட முற்பட்டான், அப்பொழுது அங்கே வந்து சேர்ந்த அந்தணர் ஒருவர், தீபாய முற்பட்ட அர்ச்சுனனைத் தடுத்தார். ''எதற்காக தீபாய்கிறாய்'' என அவர் வினவ, அர்ச்சுனனும் காரணத்தைக் கூறினான். ''இந்தச் சிறுகுரங்கா அம்பினால் கட்டப்பட்ட அணையை அமிழ்த்தியது. இதை நான் நம்பமாட்டேன்'' என்றார் அந்த அந்தணர். அனுமனுக்குக் கடுங்கோபம் வந்தது. ''மீண்டும் அர்ச்சுனன் அணையை அமைக்கட்டும். நான் என் காற்பெருவிரலால் அமிழ்த்துக் காட்டுகிறேன்'' என்று அனுமன் கூற அர்ச்சுனனும், மீண்டும் ஒருமுறை அணையை அம்புகளால் அமைத்தான். ''எங்கே உன் பராக்கிரமத்தைப் பார்ப்போம். அணையை கடல்நீரில் அமிழ்த்து பார்க்கலாம்' என்று அனுமனிடம் அந்தணர் கூற, அனுமனும் அனாவசியமாகப் போய் தம் காற்பெருவிரலால் அணையை அமிழ்த்த முயன்றான். என்ன விந்தை! முன்பு சடாலென நொறுங்கி அமிழ்ந்துபோன அணை இப்பொழுது உறுதியாக நின்றது. காற்பெருவிரலால் அழுத்திப் பார்த்து, அணையைச் சிதைக்க முடியாத அனுமன் தன் இருகால்களைக் கொண்டு உதைத்தும் கூடஅணையைச் சிதைக்கமுடியவில்லை. தன்தேகபலம் முழுவதையும் பிரயோகித்தும் கூட அணை சிதையவில்லை. ''இது எப்படி?'' என்பதாக அர்ச்சுனனும், அனுமனும், அதிசயிக்க, வந்த அந்தணர் தம்முடைய சுய வடிவத்தைக் காட்டினார். அனுமனும், அர்ச்சுனனும் அவரைக் கண்ணபெருமானாகக் கண்டு வணங்கினர். அணையின் நடுவில் தாம் வைத்திருந்த சக்கரத்தைக் கண்ணபெருமான் எடுத்துக்கொள்ள அர்ச்சுனன் அமைத்த அம்பினால் ஆகிய அணையும் பின் சிதைந்து கடலில் மூழ்கிப் போனது. இவ்வாறு அர்ச்சுனனும், அனுமனும் தத்தம் ஆற்றலின்பால் கொண்டிருந்த செருக்கை இலையாக்கி, அர்ச்சுனனின் உயிரையும் காப்பாற்றி, அனுமன் அர்ச்சுனனின் தேர்க்கொடியில் நின்று சேவை செய்யவும் திருவருள் புரிந்தவர் கண்ணபெருமானே ஆவார். (வனவாசத்தின் போது மந்தார மலர் பறிக்கச் சென்ற வீமனுக்கு வழங்கிய வரத்தின்படியும் அனுமன், அர்ச்சுனனின்தேர்க்

உன்னுடைய யாத்திரை முடிந்தது. படகி லிருந்து இறங்கும் தருணம் வந்தது. இறங்கிக் கரை ஏறு. மரணத்தைக் குறித்து பயப்படாதே. இந்த உயிரை விட்டு நீங்கி வேறு உலகம் சென் றால் அதுவும் தெய்வ ஆட்சிக்குள் அடங்கிய உல கம்தான். ஆகையால் ஏன் பயப்பட வேண்டும். ''இறந்த பின் வேறு உலகம் கிடையாது., உயிர் கிடையாது, உணர்ச்சி கிடையாது'' என்றாலும் இதைப்பற்றித்தான் கவலை என்ன? இன்பம் துன் பம் என்று அலைந்து இந்த உடலுக்காக எப்போ தும் பாடுபடுவதை விட்டுச் சுகமாக இருக்கலாம் அல்லவா!

—மார்க்க அரேலியர்

கொடியில் வந்து கூத்தாடலானார் என்பதாகவும் ஒரு வரலாறு கூறப்படுகிறது.)

இவ்வாறு தாம் கொடுத்த வரத்தின்படியே அர்ச்சுனனின் தேர்க்கொடியில் நின்று பாண்டவர் களின் வெற்றிக்காக அனுமன் ஆரவாரம் செய்த வேளையில் துரியோதனனின் கொடியில் இருந்த அவ னுடைய சின்னமாகிய பாம்போ அர்ச்சுனனைக் கண்டு பயந்து நடுங்குவதுபோல், வீசிய காற்றில் பின் னிட்டது. முன்னம் காண்டவன தகனத்தின்போது வனத்திலிருந்த பாம்புகள் எல்லாவற்றையும் எரி யுண்ணச்செய்த அர்ச்சுனன், இப்பொழுதும் எங்கே தன்னையும் தன் இனத்தையும் அழித்துவிடக் கூடுமோ என்பதாக அஞ்சி துரியோதனன் கொடி யிலிருந்த பாம்பு நடுங்குகிறது என்பதாக வில்லிப் புத்தூரார் நயம்பட

''வெறிகொளுஉருமுத்துவசன் மதலை விதலைச்
சமரின் இறுதியை விளைக்குமென்றோ
வறைவளி எதிர்த்துவர வெருவொடு புறக்கிடு
வரசன் உரகத்துவசமே''

எனப்பாடியிருக்கிறார்.

இவ்வாறு இருசாராரும் யுத்தத்திற்கு ஆயத்த மாகிவிட்ட அந்நிலையில், இன்னும் ஒரு விந்தை நடந்தது. தருமர் தம் ஆயுதங்களை எல்லாம் கீழே வைத்து, தாம் மார்பில் அணிந்திருந்த கவசத்தையும் கழற்றிவைத்துத் தம்முடைய தேரிலிருந்து இறங்கிக் கௌரவப்படைகளின் சேனாதிபதியான வீடுமர் இருக்கும் இடத்திற்கு விரைந்து செல்லலுற்றார். அண்ணனின் செய்கைக் கான அர்த்தம் விளங்காமல் வீமன் அர்ச்சுனன் நகுல சகாதேவர்களும்கூட தருமரைப் பின் தொடர்ந்து செல்லலாயினர். அப்பொழுது, அர்ச் சுனனுக்கு வந்த தயக்கமும் மயக்கமும் தரும ருக்கும் வந்துவிட்டதோ எனப்பலர்ஐயப்பட்டனர். தருமர் அல்லவோ ஆரம்பம் முதலே யுத்தம் வேண் டாம் என்று மறுத்தவர். ''யுத்தம்வேண்டாம் என்பதற்காக தருமர் செல்லவில்லை. யுத்தத்தில் பெரியோர்களின் ஆசியைப் பெறுவதற்கே தருமர் அவ்வாறு செல்கிறார்'' என்பதைத் தெரிந்து கொண்டு விட்ட கண்ணபெருமான் அவர் செயல் பொருத்தமானதே என்பதாகப் பாராட்டித் தாமும் பாண்டவர்களுடன் போய், வீடுமரை முதலில் கண்டு வணங்குகிறார். யுத்தத்தில் பாண்டவர்கள் வெல்ல நல்லாசி கோருகிறார். ''பிதாமகரே! தாங்களே பாண்டவர்களுடன் எதிர்த்து போர் செய்வீர் களாயின், இவர்கள் எவ்வாறு வெற்றிபெற இயலும்'' எனக்கண்ணபெருமான் வினவ வீடுமரும்,

''நின்றனை யருளொடாங்கே நீலமா மேனி
யோய் நீ
வென்றி மற்றிவரேயல்லால் வேறுயார் எய்து
கிற்பார்''

—முதற்போர்ச் சருக்கம் 12

''தருமராசன் மைந்தனே யவனிக்கெல்லாம்
கொற்றவன் ஆகும்''

—முதற்போர்ச்சருக்கம் 10

என்று கண்ணபெருமான் துணை நிற்க பாண்டவர் களே வெல்வர் என்று கூறித்தம் நல்வாழ்த்துகளை நல்குகின்றார். அதற்குப் பிறகு துரோணரைப் போய்ப் பாண்டவர்கள் வணங்கி ஆசிகோர அவரும் ''மன்மகன் தருமன் வென்று வையகம் எய்தநிற் பான்'' என்று தம் வாழ்த்தினைக் கூறுகின்றார். இவ்வாறு நல் வாழ்த்தினைத் தெரிவித்ததோடு வீடுமரும், துரோணரும், தம்மைப் பாண்ட வர்கள் வெல்வதற்கு என்ன உபாயம் என் பதையும் கூட அந்நேரத்தில் எடுத்துரைக்கின்றனர் என்றால் அவர்கள் பாண்டவர்கள் பால் கொண்டி ருக்கும் பேரன்பினை என்னவென்பது! பாண்டவர் கள்பால் பேரன்பு கொண்டிருந்தாலும், துரியோதன னுக்காக உயிர்விடத் துணிந்து அவனுக்காக போர் செய்ய நிற்கிறார்கள் என்றால் அவர்களுடைய செஞ்சோற்றுக்கடன் சிறப்பையும் என்னவென்று பாராட்டுவது.

பத்தாம் நாள் போரின்போது, தன்னைக் கொல்வதற்காகவே பிறந்திருக்கின்ற சிகண்டி என்ற அலியைத் தனக்கு முன் நிறுத்தினால், தான் கணையேதும் தொடுக்கமாட்டேன் என்பதையும், அந்நேரம் அர்ச்சுனனும் சிகண்டியுடன் அம்பெய் தால் அர்ச்சுனன் அம்பால் தான் மாண்டுபடுவேன் என்பதையும் வீடுமர்

''பன்னுசீரி யாகசேனன் குமரனைப் பத்தா
நாளில்
என்னெதிரமரிற் காட்டில்யான் படையாவுந்
தீண்டேன்
பின்னவன் வெகுண்டுசெய்யும் பெருமிதம்
கண்டு மீண்டு
கண்ணனை வெல்லநின்ற காளைக் கைக்கணை
யால் வீழ்வேன்''

—முதற்போர்ச் சருக்கம், 11..

என்று கூறுகிறார். துரோணரும் தம் மகன் அசுவத் தாமா மாண்டான் என்ற செய்தியை நம்பத் தகுந் தவர் யாரேனும் தம்காதுபடக் கூறுவார்களேயா னால் தாம் அதற்குப்பின் வில்லினைக் கையால் தொடப்போவதில்லை எனவும், அந்நேரம் தம் மைக் கொல்லப் பிறந்திருப்பவனாகிய திட்டத் துய்மன் அம்புவிட்டால் தம் மரணம் நேரும் என் பதையும்

''என்மகன் எனக்கு முன்னே யிறந்தனனென்று
வானில்
வின்மகபதியை யொக்கும் வேந்தர்முன்
சொல்லிற்
.......பின்னைச் சாபமென்றெடுக்கிலேனே''

—முதற்போர்ச்சருக்கம் 14.

''என்பெருஞ்சாபங் கைவிட்டியான் எதிர் நிற்ற
லானும்
தன்பெருஞ்சாபத்தாலுஞ் சமரிடைத் திட்டத்
துய்மன்

வன்புடன் எனக்குக் கூற்றாய் மலைகுவன்
மலைந்தவன்றே
நின்பெருங் கருத்து முற்றும்''
—முதற் போர்ச் சருக்கம்15

என்று எடுத்துரைக்கின்றார். சிகண்டியும், திட்டத்துய்மனும் வீடுமரையும் துரோணரையும் முறையே கொல்வதற்குப் பெற்ற வரங்களின் வரலாறுகளை, பின்னாலே நாம் விவரமாகக் காணலாம்.

பாண்டவர்கள் கிருபர், சல்லியன் முதலான பெரியோர்களையும், நாடிச் சென்று, அவர்களின் நல்லாசியை கோரிப் பெறுகின்றனர். வில்லுக்கு விதுரர் என்ற போற்றப்பட்ட பாண்டவர்களின் சிறிய தந்தை ஏற்கெனவே கூறிய படி துரியோதனனிடம் கோபம் கொண்டு, தம்விட்டுணு வில்லையும் உடைத்தெறிந்துவிட்டுப் போரில் எந்தவொரு அணியிலும் சேராமல் தீர்த்தயாத்திரைக்குப் புறப்பட்டுப் போய்விட்டிருந்தார். அவருடன் தீர்த்த யாத்திரையில் கண்ணபெருமானின் தமையனார் பலராமரும் இணைந்து கொண்டார். பலராமரையும், யாதவ சேனைகள் அனைத்தையும் துரியோதனன் வேண்ட, அவனுக்கே சகாயம் ஆக்கியிருந்தார் கண்ணபெருமான். ஆனால் தம்பி கண்ணனுக்கு எதிராக நின்று போரிடச் சற்றும் விருப்பம் கொள்ளாதவராகிய பலராமர், தம்முடைய யாதவ சேனைகள் அனைத்தையும் துரியோதனனுக்குத் துணையாக்கிவிட்டுவிதுரருடன் தீர்த்த யாத்திரைக்குப் புறப்பட்டுப் போய்விட்டிருந்தார்.

மற்ற பெரியோர்கள் அனைவரிடமும் பாண்டவர்கள் நல்லாசிகளைப் பெற்று மீள்கின்றனர். அதன்பிறகு போர் முரசங்கள் முழங்குகின்றன. சங்குகள் ஒலிக்கின்றன. உடனே யுத்தமும் தொடங்குகின்றது. துரியோதனனின் 11 அக்குரோணி சேனைகளுடன், பாண்டவர்களின் 7 அக்குரோணி சேனைகள் எதிர்த்துப் போர்செய்யத் தொடங்குகின்றன. பாண்டவர்களின் சேனை மலைபோல் வடிவு அமையும்படி அணிவகுக்கப்பட்டிருக்கிறது. நால்வகைச் சேனைகளையும் அசலவியூகமாக வகுத்தால்சிறிய அளவுள்ள சேனையைக் கொண்டே பேரளவுள்ள சேனையை வெல்வது எளிதாகும் என்பதால், பாண்டவரின் சேனை அசலவியூகமாக வகுக்கப்பட்டிருக்கிறது.

பாண்டவர் அணியின் தூசிப்படை, துரியோதனன் அணியின் தூசிப்படையுடன் மோதத் தொடங்குகிறது. இரண்டு அணிகளிலும் இருந்த நால்வகைப்படைகளும் மோதிக் கொள்ளப்போர்த் தொடங்குவதை

''சென்றுதேர்களும் தேர்களும் சேர்ந்தன
வென்றிவேழமும் வேழமும் ஊர்ந்தன
நின்றவாசியும் வாசியும் நேர்ந்தன
வென்றிவீரரும் வீரரும் மேவினார்''
—முதற்போர்ச் சருக்கம் 20.

''பாரவாளமும் வாளமும் பாய்ந்தன
கூரவேல்களும் வேல்களும் குத்தின
வீரசாபமும் சாபமும் வீக்கின
தூரவாளியும் வாளியும் தோய்ந்தவே''
—முதற் போர்ச் சருக்கம் 21

என்று வில்லிப்புத்தூரார் வருணிக்கத்தொடங்கி மிகச் சிறப்பாகப் பாரதப் போரை வர்ணித்துச் செல்கின்றார்.

---

உலகத்தில் நாம் காணும் விஷயங்கள் அனைத்தும் திரும்பத் திரும்ப பழைய விஷயங்களேயாகும். புதிய தொன்று மில்லை. ஒன்றையே நூறு வருஷம் பார்த்தால் என்ன? இருநூறு வருஷம் திரும்பத் திரும்ப பார்த்தால் என்ன? எதற்காக மரணத்தைப் பற்றிக் கவலைப்படுவானேன்? ஆயுளைப் பற்றி ஆசை கொள்வானேன்.?

—மார்க்க அரேலியர்

---

இருதிறத்து அணிகளிலும் இணையில்லா வீரம் படைத்தவர்கள் மோதுகின்றனர். வெற்றி அல்லது வீரமரணம் என்ற ஒரே முடிவில் போருக்கு வந்திருந்த வீரர்கள் உயிரைத் துச்சமென மதித்து ஆற்றிடும் இந்த போரைக் காண ஒவ்வொருவர்க்கும் பிரமன் ஆயிரம் கண்களை யாவது கொடுத்திருத்தல் வேண்டும். இதோ இங்கே ஒரு வீரன், தான் கொண்டுவந்திருந்த அம்புகள் யாவும் தீர்ந்துபோன நிலையில் என்ன செய்கிறான் பாருங்கள்? ''பகைவர் எய்ததனால்மேனியில் பாய்ந்திருக்கும் அம்புகள் இருக்கின்றனவே'' என்று அவற்றை ஆர்வமுடன் உதிரம் கொட்ட கொட்ட தன்னுடலிலிருந்து ஒவ்வொன்றாகப் பறித்தெடுத்து தன் வில்லில் பூட்டி எதிரிகள் மேல் தொடுக்கிறான். இங்கே இன்னும் ஒருவீரன் தன் வலக்கையை எதிரிகள் வெட்டி வீழ்த்தி விட்ட நிலையிலும், சற்றும் கலக்கம் கொள்ளாமல் பற்களினால்அம்புகளை எடுத்தெடுத்து வில்லில் பூட்டி இடக்கையால் எதிரிகள் மேல் அம்பு செலுத்துகின்ற இந்த வீரக்காட்சியைப் பார்த்தால் நமக்கு மெய்சிலிர்க்கிறது! இதோ இங்கே இருவீரர்கள் எதிர்எதிர் நின்று வாள் கொண்டு பொருகின்ற ஒப்பற்றகாட்சியைப் பாருங்கள். ஆஹா! இதோ ஒரு வீரனின் கைவாள் மற்றொரு வீரனின் தலையைச் சீவுகின்றஅதே நேரத்தில் ,தலையற்ற முண்டமாகத் தரையில் சாய்வதற்கு முன்னம், அந்த வீரனும், தன் தலையை வெட்டி வீழ்த்தியவனின் தலையைத்தானும் வெட்டி வீழ்த்தி இருவருமாக ஒருசேர சாய்கின்ற ஒப்பற்ற காட்சி.

இருஅணியிலும் உள்ள வீரர்கள் இவ்வாறு வீரம்காட்டிப் போரிடும் நேரத்தில் கௌரவசேனையின் தளபதியான வீடுமரும், அர்ச்சுனனும்நேருக்கு நேர் நின்று மோதுகின்றார்கள். அர்ச்சுனனின் காண்டீபத்திற்கு ஆற்றாது வீடுமரும் பின்னடைய, துரியோதனனின் கட்டளையால் வீடுமருக்கு உதவியாக சகுனியும், சல்லியனும், துரியோதனனின் தம்பிகள் சிலரும் வந்து அர்ச்சுனன்மேல் அம்புகளைத் தொடுக்கின்றனர். அர்ச்சுனனுக்குத் துணையாக வீரவீமனும், வீர அபிமன்யுவும் வந்து சேர்ந்து கொள்ள, வீடுமரின் மார்பு கவசத்தின்மேல் வீமன் விடும் ஒன்பது பாணங்கள் சீறிச் செல்கின்றன. சகுனி, சல்லியன், மற்றும் துரியோதனன் தம்பி மார்களையும் அஞ்சி ஓடச் செய்கின்றது, வீமனின் வில்லிலிருந்து சீறிவரும் அம்புகள்.

அபிமன்யு, தான் தொடுத்த அம்புகளால் வீடுமரின் தேர்க்குதிரைகள் நான்கையும் எமனுலகிற்கு அனுப்பிவைத்து ஆரவாரம் செய்கின்றான். விராட மன்னனின் வீர மைந்தன் உத்தரன், சல்லியன் மீது அம்பு மழையைப் பொழிகிறான். உத்தரன் விடும் அம்புகள் சல்லியன் தேர்க்குதிரைகளையும், தேர்ப்பாகனையும் சாகடிக்க சல்லியன் உத்திரனின் வீரத்திற்காற்றாமல் தடுமாறுகிறான். அடுத்து உத்திரன் விடும் அம்பு, சல்லியன் உயிரைக்

குடிக்கச் சீறிவரும் வேளையில் சட்டென ஒதுங்கிக் கொண்ட சல்லியன் தான் ஒருவேலை எடுத்து உத்தரன்மேல் வீசுகிறான். அந்தவேல் உத்திரன் மார்பைத் துளைத்து அவன் உயிரையும் குடித்து விடுகிறது. அந்தோ! உத்தரனால் வானுலகம் போய்ச் சேர்ந்திருக்க வேண்டிய சல்லியன், உத்தரனை வானுலகிற்கு அனுப்பிவிடுகிறான்.

''வாவிமேல் வருபுரவி வீழவும், வலவன்வீழ
வும், மற்றளார்
ஆவி வீழவும்அவனெடுத்த வில்அற்று வீழவும்
அமர்செய்தான்
பாவியோடினி வில்லெடுப்பது பாவம் என்
றொரு பாரவேல்
ஏவினான் எதிர்சென்று சல்லியன்; இவனும்
வானகம் ஏறினான்'

—முதற்போர்ச் சருக்கம் 40

பாரதப்போரில் முதல்நாள்போரின் முற்பகல் போரிலேயே பாண்டவர் அணியைச் சேர்ந்தவிராட மன்னனின் வீரமகன் உத்தரன், சல்லியன் வேலுக்கு பலியாகி மாண்டுவிடுகிறான். இத்தனைக்கும் அவன் உடன் பிறந்த அண்ணன் சுவேதனேபாண் டவர் அணிக்குத் தளபதியாக இருந்தும் கூட, அவன் தன் தம்பியையே பலி கொள்ளக் கொடுத்துவிட்ட சோகம் நிகழ்ந்து விடுகிறது. தம்பி உத்தரனின் ஆவி பறித்த சல்லியனின் ஆவியைப் பறித்தால் அன்றித் தன் ஆவேசம் அடங்காதெனச் சீறிவருகிறான் சுவேதன்.

''தம்பிபட்டனன் என்று கொண்டெழு சாகரத்
தெழு தழலென
தும்பையுற்று மிலைச்சி ஈசன் அளித்த வில்
லொடு தோன்றினான்''

—முதற்போர்ச் சருக்கம் 48

''எங்கு நின்றனன் எங்கு நின்றனன் மத்திரத்
தரசென்று போய்
அங்கு நின்ற மகிபர் வென்னிட அவனை
முந்துற அணுகினான்''

—முதற்போர்ச் சருக்கம் 49

சுவேதன் எதிர்த்தவர்களை எல்லாம் வெட்டி வீழ்த்தி மத்திர நாட்டு மன்னன் சல்லியன் இருக்கு மிடம் அடைந்து அவன்மேல் ஆவேசமாகப் பாய்கிறான்.

தன் தம்பியைக்கொன்ற சல்லியனைக் கொல்ல சுவேதனால் முடிகிறதா? உத்தரனைப் பலிகொடுத் துத் தோல்வியை எடுத்தஎடுப்பிலேயே சந்திக்க நேர்ந்த பாண்டவர்கள் பிறகு நடந்த முதல்நாளின் பிற்பகல் போரிலேனும் வெற்றியைக் காண முடிகிறதா என்பனவற்றையெல்லாம் இனி அடுத்த இதழில் விரிவாகக் காண்போம்.

— — — — — —

# வாசகர் எண்ணங்கள்

மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் எம்.ஜி.ஆர் அவர்களின் ஆட்சிக் காலமே ஆன்மீகத்தின் பொற்காலம் என்பதை விளக்கிய மாண்புமிகு ஆர்.எம்.வீ. அவர்களின் சொற் பொழிவு அருமையிலும் அருமை. மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சரின் அறநிலையத் துறைச் சொற்பொழிவுகள் அனைத்தையும் தொகுத்து, அறநிலையத் துறையே வெளி யிட்டால், அது ஒரு சிறந்த வரலாற்றுப் பொக்கிஷமாக அனைவருக்குமே பயன்படும்.

மு. சுப்பிரமணியன்,

மதுரை-1.

ஆண்டுதோறும் நூற்றுக் கணக்கான கிராமக் கோயில்களின் திருப்பணிக்கும், ஆயிரக் கணக்கான திருக்கோயில்களின் நித்தியப் பூசைக்கும், லட்சக்கணக்கான திருக்கோயில் பணியாளர்களின் நல்வாழ்விற்கும் ஏழுகோடித் திட்டம் எனும் ஆலய மேம்பாட்டுத் திட்டத் தின் மூலம் வழிவகுத்த மாண்புமிகு அமைச்சர் ஆர்.எம்.வீ. அவர்களின் தொண்டினை தமிழ் உலகம் போற்றிக் கொண்டாடக் கடமைப் பட்டிருக்கிறது.

அ. பாபு,
சென்னை-5.

''அறநிலையத் துறை கடல்போன்ற துறை. துறை சிறியதாக இருக்கலாம். இது தொடர்பு கொண்டிருக்கின்ற பகுதி இருக் கின்றதே மிகப் பெரியது. ஆகவே இதை நிர்வகிப்பது என்பது மிகப் பெரிய கடினமான பணி. ஆனால் இந்தப் பணியை எப்படியோ முயன்று முடிந்த அளவு நிர்வகித்துக் கொண் டிருக்கிறோம்'' என்ற மாண்புமிகு ஆர்.எம்.வீ. அவர்களின் உரைப்பகுதி என் உள்ளத்தைத் தொட்டது. குறை சொல்வதும் எழுதுவதும் யாருக்கும் சுலபம்; செயல்படுவதே சிரமம்; கடமையே கண்ணாக, நிதமும் செயல்பட்டுக் கொண்டிருக்கும் அறநிலையத்துறை அமைச் சரின் ஆக்க திட்டங்களுக்கு ஆதரவு நல்குவதே அனைவருக்கும் மேலான தருமம்.

த. கந்தசாமி,
சேலம்-6.



மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் திருமிகு ஆர்.எம்.வீ. அவர்கள், அமெரிக்காவிற்கு ஆன்மீகப் பயணமாகப் புறப்பட்ட திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகளுக்குப் பொன்னாடை அணிவித்து வாழ்த்துக்களைத் தெரிவிக்கிறார்கள்.



சென்னையில் நடைபெற்ற சுற்றுலாப் பொருட்காட்சியில் அமைக்கப்பட்டிருந்த அரசுத்துறை அரங்குகளில் இந்துசமய அறநிலையத்துறையின் அரங்கு முதல் பரிசினைப் பெற்றது. மாண்புமிகு சட்டப்பேரவைத் தலைவர் திருமிகு பி.எச். பாண்டியன் அவர்கள் பரிசினை வழங்க, அறநிலையத்துறை ஆணையர் திரு க. சுந்தரமூர்த்தி ஐ.ஏ.எஸ். அவர்கள் பரிசினைப் பெற்றுக்கொள்கிறார்.

பதிவு எண். எம் 7039



மதுரைமாநகரில் தமிழ்ப்புத்தாண்டுத் திருநாள் அன்று மாண்புமிகு தமிழக முதல்வர், பொன்மனச் செம்மல் டாக்டர் எம் ஜி.ஆர். அவர்கள் தம்திருக் கரங்களால் உலகத் தமிழ்ச் சங்கத்தைத் தொடக்கி வைக்கிறார்கள். மாண்புமிகு டாக்டர் முதல்வருக்கு, உலகத் தமிழர்களின் சார்பில், பழநி அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி ஆலயத்தின் தக்கார் திரு க. பொன்னுசாமி அவர்கள் தங்கத் தாமரை வழங்குகிறார்.

வெளியிடுபவர் : ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-600034.
ஆசிரியர் : கவிஞர் டாக்டர் த. அமிர்தலிங்கம், M.A., Ph.D.
அச்சிட்டோர் : தமிழரசு அச்சகம், அரசினர் தோட்டம், சென்னை-600 002.